# சேரநாட்டுத்
# தமிழ்ப் பெருமக்கள் வரலாறு.

(முதற் பாகம்)



ஆக்கியோன்

வித்வான் C. சுப்பிரமணியம்.

பதிப்பாசிரியர்

S. M. ஜகநாதம்,

புத்தக வியாபாரம்,

நாகர்கோவில்.

1940

 [12 அணா.

# FOREWORD.

The fascinating story of the early Chera Kings is embedded in the ancient Tamil Classics, such as Pathitrupatthu, Pura nanuru, and Silappadi-karam, and is not easily accessible to the Tamilian population, or the ordinary student population, it being couched in poetic language of the ancient Tamil Sangam period. The original poems have to be carefully studied, and the story has to be rendered in simple and easy Tamil prose, in narrative form, so as to be understood by all. It is a very difficult task. This service has been timely done, to some extent, by the author of the present book, **Vidwan C. Sadasivam Pillai,** in respect of the Kings Cheraman Perumchottuthian Cheralathan, and Perum Cheralathan, the warrior King Cheran Senguttuvan, Ilanko Adigal, the immortal author of Silappadikaram, Kings Perum Cheral Irumporai, Mantharan Cheral Irumporai and Cheraman Kanaikkal Irumporai, and the great Royal poet-saints, Cheraman Perumal Nayanar and Kulasekhara Alwar. The successful way in which he has tackled this work leads us to hope that he will, in due time, take up the work of writing the story of the remaining Chera Kings also.

A word about the manner in which he has accomplished his task will not be out of place here. That his command of the Tamil language is admirable, would be conceded by any impartial reader of the book. His diction is pure, flowing and elegant. It is noteworthy that he has used pure Tamil words, as far as possible. That is a step in the right direction, because,—and I say it without the slightest tinge of prejudice towards Sanskrit or any other language,—it is highly necessary in these days to counteract adverse tendencies, preserve the purity and native charm and conserve the strength, of the Tamil language, a language which has heroically weathered the storms and withstood the cataclysms of ages, solely by virtue of its inherent vitality, simplicity and sweetness. Many excellent Tamil words are becoming obsolescent by disuse, owing to the influx of foreign words which seem to have wrongfully usurped their place, through no fault of them (the Tamil words). Such being the case, **Mr. Sadasivam Pillai** has set a right model to others in the preservation of good Tamil words, by his own liberal use of them in this book. The book, for that reason and for its intrinsic merits, deserves to be placed in the hands of students.

**T. Lakshmana Pillai**, B. A.,
(Isai Tamil Selvar),
Member, Board of Studies in Tamil,
and
Publication Department,
University of Travancore.

Nagercoil,
24th May 1940

# நூன் முகம்.



இச் சிறு உரை நடை எழுதுவதற் கெழுந்த காரணங்கள் இரண்டு. ஒவ்வொரு நாட்டவரும் தத்தம் முந்தையோர் நிலையை நன்கறிந்து அவர் கடைப்பிடித்த நன்முறைகளின் வழி நிற்றல் நலன் தரும் எனக் கருதிய தொன்று. மற்றொன்று, பண்டைப் பனுவல்களாகிய பெரு நிலம் அகழ்ந்து, அரும்பொருட் புதையல்களை எடுத்துத் துய்ப்பதற்குரிய ஆர்வத்தை எழுப்பவேண்டு மென்பது.

இவ்விரு நோக்கமும் ஒருங்கே பெறத் துணைபுரிவது புறநானூறு, சிலப்பதிகாரம் முதலிய பழந்தமிழ் இலக்கியங்களே. எதுகையும் மோனையும் மலிந்து உள்ளீடற்ற வெள்ளைப் பாடல்களைக் கற்றின்புறும் தற்கால மக்கள் சிலர்க்கு அவை அரிதுணர் திறத்தனவாய்த் தோன்றலாம். அதிலும் மாணவர் அவற்றின் பயனைத் துய்க்கச் சிறிதும் வன்மையற்றவர் ஆகின்றனர். பருப்பொருளவாய கதைகளையோ வரலாறுகளையோ புறநானூற்றுப் பாடல்கள் மேற்கொண்டிருக்குமாயின் அவர் கருத்து அதில் செல்லுதல் கூடும். அஃதில்லாமையின் நுணுகி நோக்க ஆசை குன்றி அப்படியே விட்டு விடுகின்றனர்.

இஃதுணர்ந்து கதை நிகழ்ச்சி கொடுத்துப் பாடல்களை விரித்துரைக்கலா மெனக் கருதினேன். எல்லாப் பாடல்களையும் அவ்வாறு செய்வது இயலுவதன்மையின் சேரநாட்டிற் றோன்றிய தமிழ்ப் பெருமக்கள் வரலாறுகள் ஐந்து, புறநானூற்றினின்றும் எடுத்துக்கொள்ளப்பட்டன.

இரண்டு, சிலப்பதிகாரத்தினின்றும் தழுவிக் கொள்ளப் பட்டது.

இவற்றுள் சில இடங்கள், ஆராய்ச்சியாளர் கூற்றுக்க ளோடு முரணுவனவாய்த் தோன்றலாம். அவர் கொள் கைகளும் முடிந்த முடிவின அன்மையானும், எனது நோக்கம் மேலே விளக்கப்பட்டமை யானும் குற்றப்படா எனக் கருதித் துணிந்தெழுதலாயினேன்.

தமிழறிவிற் றலைநின்று தமிழ் வளர்த்த பெரியார் எழுவர் வரலாறுகளோடு பத்திப்பெரு வெள்ளத்தே முங்கித் திளைத்துச் சுவை ததும்பப் பாடல்க ளியற்றியும் தாண்டியும் நின்ற சேரநாட்டு நாயன்மாரிருவர், ஆழ்வா ரொருவர் என்பவர்களது வரலாறுகளும் இதில் சேர்க்கப் பட்டுள்ளன. இவை, காலத்தாற் பிற்பட்ட பெரியபுராணம், நாலாயிர திவ்வியப் பிரபந்தம் முதலியவற்றின் துணை கொண்டு எழுதப்பட்டமையின் இறுதியில் வைக்கப் பட்டன. இத்தகைய பெரியார்களைத் தன்னகத்தே தாங்கிப் படைப்புக் காலந்தொட்டே மேம்பட்டு விளங்கிய சேரநன்னாட்டின் தனிப்பெருமை அறிய வேண்டுவது ஒருதலை யாதலின் அதனை முதற்கண் வைத்தேன்.

இங்ஙனம் எழுதப்பட்ட இச்சிறு உரைநடை நடத்தர மாணவர்களுக்குப் பெரிதும் பயன்படு மென்பது எனது கருத்து. அதனால் இன்னும் பல பெரியாரது வரலாறு களும் தொடர வரைந்து வருகின்றேன். தமிழ்ப் பெரியார், ஆதரவு தருவரேல் அவையும் வெளிவருதல் எளிதாகும். ஆதலின் அவர் கண்ணோட்டம் பெறத் தவங்கிடக்கின் றேன். தமிழறிவிற் கடைப்பட்டவனாய என்னையும் இச்

சிறு பணியில் ஈடுபடுத்திய இறையருளை நினைந்து நினைந்து நைந்துருகுகின்றேன். இவ்வுரைநடை எழுதப்பட்ட காலத்திலும், அச்சூர்தி ஏறின காலத்திலும் வேண்டிய வேண்டியாங்கு அறிந்துதவிய என் ஆசிரியர் உயர்திரு. பண்டித— தா. சாஸ்தாங்குட்டிப் பிள்ளை யவர்களுக்கு நான் எழுமையும் கடப்பாடுடையேன். இஃதச்சூர்தி ஏறிய காலத்துப் பெரும்பொறுப்பெடுத்து நன்முறையில் பதிப்பித்துத் தந்த தென்னிந்திய அச்சுநிலையத் தலைவர் திரு C. இராமநாத பிள்ளையவர்கட்கும் எனது நன்றி என்றும் உரியதாகும்.

திருவஞ்சிக்கல்லூர்,
5—10—1115.

செ. சதாசிவம்.

# உள்ளுறை.

# சேரநாட்டுத் தமிழ்ப் பெருமக்கள் வரலாறு.

## சேர நாடு.

அமிழ்தினு மினிய தமிழன்னையாண்ட செழுமை சேர் நாடு பண்டு முப்பிரிவுடையதாயிருந்தது. அன்னையின் அருந்தவப் புதல்வர் சேரசோழ பாண்டியர் மூவரும் அவளடிபோற்றிச் செவ்வனே ஆண்டுவந்தனர். அக்காலையிலே தமிழ்த்தாய் நன்கு போற்றப்பட்டனள். நாளுக்கு நாள் வளர்ச்சியுற்றுத் திகழ்ந்தனள். திறலுடைய மூவேந்தரை மக்களாகப் பெற்ற அவள்முன்னே முதுமை வந்தணுகவும் அஞ்சியது. இளமையில் வளர்ந்து இன்பத்துள் தேங்கிநின்ற அன்னையும், தம்மக்களுக்கு அருள் சொரிந்து நன்கு கடைக்கணித்தனள். அன்னையின் அருள்பெற்ற மன்னவரெல்லாம் இறந்தும் இறவாராய் மன்னு வுலகில் மன்னிய புகழுடன் இன்றளவும் நின்று நிலவுவாராயினர். இங்ஙனம் புகழுடம்புடன் பொலிந்து தோன்றும் பெரியார்களில் சேரநன்னாட்டில் சிறந்து விளங்கிய தமிழ்ப்பெருமக்களைச் சுட்டிக் காட்டுதல் இச்சிறு நூலின் நோக்கமாகும். பாடல்பெற்ற மன்னவரேயன்றித் தமிழ்த் தாய் நோக்குப் பெற்ற தனையர் ஏனையோரும் இங்குக் கூறப்படுவர்.

மூவேந்தருள்ளும் முதலில்வைத்தெண்ணத் தகுந்தவர் சேரரே என்பதற்குச் சான்றுகள் பல. சேரர்குடி-

'கற்றோன்றி மண்டோன்றாக் காலத்தே முற்றோன்றி மூத்தகுடி' என்றுகூற, அம்மரபினரைச் சுட்டுகின்ற 'வானவர்' என்னும் பெயரே சிறந்த எடுத்துக் காட்டாம். இன்னும், சேரசோழ பாண்டியர் என்னும் முறைவைப்பில் சேரரே முதலில் வைத்துக் கூறப்படுகின்றமையும், 'வழங்குவ துள்வீழ்ந்தக் கண்ணும்' என்னும் 955-ஆம் குறளுரையில் "பழங்குடி—தொன்றுதொட்டு வருகின்ற குடியின்கட் பிறந்தார்" என்றும், 'தொன்றுதொட்டு வருதல், சேர சோழ பாண்டியரென்றாற்போலப் படைப்புக் காலந் தொடங்கி மேம்பட்டு வருதல்' என்றும் பரிமேலழகர் கூறியிருத்தலும் நோக்கத்தக்கன. இம்மரபினுதித்தோர் தனிப்பெருமையை மட்டும் எடுத்துப் புகல்கின்ற 'பதிற்றுப் பத்து' என்னும் நூல் இன்றும் நின்று நிலவுகின்றது. இவையன்றியும் முப்பெரு வேந்தரையும், குறுநில மன்னர் பலரையும் புகழ்ந்து கூறும் பாடற்றொகையாகிய புறநானூற்றில் சேரன்—சோழன்—பாண்டியன் என அடைவு படுத்தித் தொகுத்திருக்கின்ற முறைமையும் சேரரது பெருமையைச் சிறப்பித்துக் காட்டுவதாகும். சோழ பாண்டி வேந்தர்கள் பன்னூறாண்டுகட்கு முன்பே மங்கிடவும் சேரபரம்பரை மாத்திரம் இன்றும் புத்தொளிபெற்றுப் பொலிந்து தோன்றுவதொன்றே அதன் பொன்றாப் புகழையும், குன்றாப் பெருமையையும் குன்றில் விளக்கென விளக்கிக் காட்டுவதாகுமன்றோ? சேரர் தகைமையை என்னென்பது? அவர் செப்பருந் தகைமை

> தக்கார் தகவில ரென்ப தவரவர்
> எச்சத்தாற் காணப் படும்

என்னும் பொதுமறையால் தெளிவுறுமன்றோ? வானவரெல்லாம் தானமும் தயையும், அன்பும் அருளும், தவமும் கொடையுமுடையராய் இருந்ததனாலன்றோ அவர்

முட்டாச்சிறப்புடன் இன்றும் செங்கோலோச்சி வருகின்றனர்? இவர்குடி என்றும் நின்று நிலவுவதாக.

சேரநாடு, முன்னே குமரிமுதல் வடக்கே மலபார் வரையிலும், மேல்கடல் முதலாக் கிழக்கே சேலம் கோயம்புத்தூர் வரையிலும் பரந்திருந்தது. தொன்று தொட்டே நின்ற புகழுடையது இந்நாடு என்பதற்கோர் சான்று தருவாம். பாரதப்போருக்கு மிக மிக முற்பட்டது இராமாயணம். இராமகாதையை நேரில் அறிந்து நூலாக்கிய முனிவர் வான்மீகி. அவர், தம் நூலுள்ளே சுக்கிரீவன் வானரவீரருக்குச் சீதாபிராட்டியைத் தேடிவர இடம் சுட்டிக் கூறுகின்றபொழுது கேரளநன்னாட்டின் சிறப்புக்களைக்கூறி, அதில் முரசீபத்தனமென்னும் துறைமுக முண்மையையும் சொல்லி விடுக்கின்றதாக எழுதியுள்ளார். நமது சேரலநாட்டையே இங்குக் கேரளமெனக் குறிப்பிட்டார். முரசீபத்தன மென்றது பெரியாறு கடலொடு கலக்குமிடத்திலிருந்த 'முசிறிபட்டினம்' என்னும் துறைமுகத்தைச் சுட்டியதாகும். மேல் கடற்கரையிலே தொண்டி, முசிறி என்னும் இரு துறைமுகப்பட்டினங்கள் வர்த்தகத்துறையில் மிக விருத்தி பெற்று விளங்கினவாகப் பழந்தமிழ் நூல்களாலும் அறியப்படுகின்றன. ஆகவே இது தொன்மையாலும் வளமையாலும் மிகச்சிறந்ததாகும்.

இயற்கை யன்னையின் இருப்பிடமாயது இந்நாடு என்று கூறல் மிகையாகாது. கனைகடலும் பனிவரையும் இதற்கு அரண்செய்வன. பெருக்கெடுத்தோடும், பேரியாறுகள் பல கிழ்மலையிற்றோன்றி மேல்கடல் நோக்கிச்

சென்று வழிகளெல்லாம் வளம்படச் செய்கின்றன. அவ்வியாறுகள் ஆரமும், அகிலும், தேவதாரமும், முத்தும், பொன்னும், தந்தமும் கரைகளில் கொண்டு நிரைபட ஒதுக்குவதால் அரும்பொருள் கொடுக்கும் பெருங்கொடையாளனை ஒத்தன. அரியவேலைப்பாடுகளமைந்த அருங் கலனும், பொன்னும் ஏந்திவந்து தொண்டி, முசிறி முதலிய துறைகளில் தங்கி, வேந்தனைப்பார்க்கச் செவ்வி பார்த்துச் சிற்றரசர் திறையுடன் காத்து நிற்பது போல் பரந்து கிடக்கும் மரக்கலங்களுக்கு, மலைபடு பொருள்களாய ஏலம், இலவங்கம், ஆரம், அகில், தோகை முதலியனவும், உள்நாட்டுப் பொருள்களாய மிளகு, அரிசி முதலியனவும் தம்தலைமேல் சுமந்து வந்து கொடுத்தனுப்பும் தன்மையால் அவ்வியாறுகள் பணியாளர்களையும் ஒத்தன.

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்னும் நானிலமும் மருவிய நன்னிலமாயது சேரநாடு. ஆகையால் பொய்கையார் என்னும் புலவர்பெருமான் அந்நாட்டிறைவனை ஒருசமயம் புகழும் வகையறியாது திகைக்கின்றனர். "அரசே! நீ உயர்ந்தோங்கிய செழுவரைகளையுடையனாயிருப்பதால் உன்னை மலைநாட்டையுடைய 'நாடன்' என்று கூறவா? ஆயின், ஏனைய மூன்று நிலமும் இல்லை என்று வருமே. ஆகவே நானிலத்திற் சிறந்ததும், ஆலையும் சோலையும் அணிபெறச் சூழ்ந்து, ஏரியும் பொய்கையும் எங்குமுடைத்தாய், காய்குலைத்தெங்கும் கமுகும் வாழையும், கவின்பெறச் சுற்றிய கழனிகள் நிறைந்ததுமான மங்கா வளமுடை மருதநன்னாட்டை உடையனாயிருப்பதால் நின்னை 'ஊரன்' என்று கூறுவேனோ? நீ கடல்

நாட்டையும் உடையனாயிருக்கின்றாயாதலின் அது பொருந்தாது. பின், முத்தொடு நித்திலம் தத்திக் கொழிக்கும் தண்டிரைக் கடல் நாட்டையும் கொண்ட நின்னைச் 'சேர்ப்பன்' என்று சொல்வேனோ? அதுவும் குறைவுடையதாகும்; நானிலமும் உடையோனை ஓர் நிலத்தால் பேர் கூறல் பழிப்பாதலால். பின், நின்னை எங்ஙனம் கூறிப் புகழ்வேன்? நின் நாடுதான் எத்தகையதோ எனின் தினைப்புனங் காக்கும் நனைக்குழல் மடவார் கதிர்கள் கவரும் கிளிகளைக் கடிவதற்குத் தட்டையென்னும் கருவியைப்புடைத்தால் அவ்வோசை கேட்டுப் பக்கத்தேயுள்ள கழனிநெல்லைக் கவரவந்த பறவைகளும், கடற்கரையே பரதவர் உணக்கும் மீனை உண்ண வந்த பறவைகளும் ஒருங்கே எழுந்து பறக்கும் தன்மையில் நானிலமும் மயங்கியது," என்று மிக அழகுபடக் கூறுகின்றார். ஆகையால் சேரநாட்டின் வளத்தினைச் சிறுசொற்களால் கூறி முற்றுவித்தல் முடியாததாகும். இத்தகைய சேரநாட்டின் தலைவர்களது வரலாறுகளை இயன்ற அளவு கூறுவோம்.

# 1. சேரமான் பெருஞ்சோற்றுதியஞ் சேரலாதன்.

சேர வேந்தருள் முற்பட்டவனாக அறியப்படுகின்றவன் சேரமான் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் என்பான். இவனுக்குப்பின் சில அரசர்கள் பெயர்களும், சில குறிப்புக்களும் தெரிகின்றன. அவருள் சிறந்த பெருவேந்தன் சேரமான் பெருஞ்சோற்றுதியஞ் சேரலாதன் என்பவன். இவனது இயற்பெயர் உதியஞ்சேரல் என்பது. இவனது தாய்தந்தையர், ஆட்சிமுறை முதலியனபற்றி ஏதும் தெரிகின்றதில்லை யாயினும் இவனுடைய அளப்பரும் வண்மைக்குணத்தால் எழுந்த அரிய செய்கையால் இவன் புகழ் திண்மை பெற்றுத் திகழ்ந்து வளர்ந்தது. அச்செய்கைபற்றிப் பின்னர்க் கூறுவோம்.

இவனது குணப் பெருமைகள் புலவர்களால் புகழ்ந்து கூறத்தக்கன. முரஞ்சியூர் முடிநாகராயர் என்னும் புலவர் பிரான் இவர் பெருமைகளை ஓரளவு கூறிப்போந்தார். அரசர்க்கு இன்றியமையாத சிறந்த குணமாகிய பொறுமையுடையவனிவன். அணுச்செறிந்த இந்நிலமானது, தாங்குகின்ற தன்னை அகழ்ந்தவரையும் பொறுத்தல் (தாங்குதல்) போல, பகைவர்கள் பிழை புரிந்தால் அதனைப் பொறுக்க வல்லவன். இவன், மிகப்பரந்த ஆராய்ச்சியுடையவன். எதில்? பொறுக்கமுடியாத பிழையைச் செய்த பகைவர்களை அழிப்பதில். அவ்வாராய்ச்சி எத்தன்மையதென்றால்,

இந்நிலத்தின் மேலதாய் ஓங்கி உயர்ந்து அளவுகூறமுடியாததாய்ப் பரந்திருக்கின்ற ஆகாயத்தினது அகலத்தைப் போலப் பரந்து ஓங்கியது. அவ்வாகாய மெங்கும் பட்டுத்தடவி மிக்க வலிமையோடு எழுந்து வீசுகின்ற சண்டமாருதக் காற்றைப்போல, பகைவரை அழித்தொழிக்கத் தகுந்த உள்வலியாகிய மனவலிமையும், புறவலியாகிய நாற்படையின் வலிமையுமுடையானிவன். அங்ஙனமே அக்காற்றினோடு பொருந்திக்கொண்டு எதிர்ப்பட்டபொருளை எரித்தழித்துச் சாம்பராக்கும் தீயைப்போல் தன்னை எதிர்த்து வந்தோரது உடலும், மனமும் வெதுப்பி அழிக்கும் வீரம் மிக்கான். ஆனால், மிக்க அருளையுமுடையான். தீயினோடு நேர்மாறான தன்மையமைந்த தண்ணீரைப்போலப் பகைவர் தம்மடிபணிந்து வழிபட்டால் முன்னைய வெஞ்சினம் மாறித் தண்ணருள் புரியும் தகைமையுடையான். இங்ஙனம் ஐம்பெரும் பூதத்தையும் அணிபெற ஒத்து, ஆற்றலிலும் அருளிலும் சிறந்து விளங்கினான் நம் சேர அண்ணல்.

இவனது கீழ் கடலிற்றோன்றிய கதிரவன், திரும்பவும் இவனது மேல் கடற்கண்ணே குளிப்பதற்கிடமான விரிந்த நாட்டையுடையான். 'வானவரம்பன்' என்னும் சிறப்புப்பெயரினையுடையவன். ஒப்பில்லா மந்திரச்சுற்றத்தை ஒழிவின்றிக்கொண்ட உயர்குணத்தான். பால் தன் இனிமைக்குணத்தை விட்டுப் புளித்துவிட்ட போதிலும், ஞாயிறு உலகினுக்கு வெளிச்சம் தருவதை விட்டு இருண்டு போயினும், வேதஒழுக்கமெல்லாம் வேறுபட்டுப் போனாலும் இவர்கள் மந்திராலோசனை என்றும் மாறுபட்டுப்போவதில்லை. இத்தகைய ஆற்றல் மிக்க பெரியாரே அவனுக்கு அமைச்சரும் அருந்துணைவரும் ஆவர்.

இங்ஙனம் வேந்தர்பிரான் வீறுடன் ஆண்டுவருங் காலத்தே தான் பாரதப்போர் தொடங்கியது. பன்னீராண்டு வனவாழ்க்கையும், ஒருவருடம் கரந்துறை வாழ்க்கையும் நடத்திய பின்னரும், உரியபங்கைத் தராது, பாண்டவர் நாட்டைக் கவர்ந்துகொள்ள எண்ணிய கௌரவராய நூற்றுவரோடும் போர் தொடுப்பதெனத் தீர்மானித்தார் ஐவரும். படைவலியும், துணைவலியும் பெற்ற துரியோதனன், ஐவரையும் அரைக்கணத்துள் முடித்திடலாமென மனப்பால் குடித்துப் பெருமகிழ்வுடன் போருக்கெழுந்தான். தருமரனுப்பிய தூதின்படி அவர்க்குதவியாகப் பாஞ்சாலதேசத்தரசர்களுள் துருபதராசன், திட்டத்துய்மன், திட்டகேது முதலியோர் நால்வகைப்படையுடனும், இன்னும் பல வேந்தர்களுடனும் வந்தார்கள். உத்தமோசாவும், உதாமனும், மச்சநாட்டவராகிய விராடராசனும், சதாநீகவேந்தனும், வராககேது என்பவனும், உத்தரகுமாரனும் பலவகைப்படையுடன் வந்து சேர்ந்தனர். இன்னும் பாண்டியனும், சோழனும் பார்நெளியப் பரந்த படையுடன் வந்து நெருங்கினர். கடோற்கசனும், அபிமனும், அரவானும், திரௌபதியின் மக்களாய விந்தன், சோமன், வீரகீர்த்தி, புண்டலன், ஜயசேனன் என்னும் ஐவரும் சேனைப்பெருக்குடன் சீறி வந்தனர். இவர்களேயன்றிச் சீனர், சாவகர், மத்திரர், மாளவர், தெலுங்கர், கலிங்கர், சோனகர், கன்னடர், மாகதர், துலுக்கர், குச்சரர், ஒட்டர் என்னும் தேசத்தரசரெல்லாம் எண்ணிலாப் பெருஞ்சேனைகளோடு மண்ணிடங்கொள்ளாவகை எழுகடலும் ஒருங்கு கூடினபோல் எழுந்து வந்தனர்.

கௌரவருக்குத் துணையாய் வந்தோரும் கணக்கிலடங்காதவராவர். துரியோதனன் ஓலையெழுதித் தூதனுப்பியபடி சல்லியன், சகுனி, விந்தரன், விந்தன் முதலிய வேந்தரெல்லாம் வேறுவேறான வேலை சூழ்ந்தனபோல் மொய்த்தார்கள். கலிங்கம் முதலிய மேற்கூறிய நாடுகளிலேயிருந்து பாண்டவர் பக்கம் வந்த வேந்தரொழிந்த ஏனைய சிற்றரசர்களாய கலிங்கர், தெலுங்கர், கேகயன், கவுடராசன், மாளவன், சோழன், ஒகநீகன் முதலியோரும், பங்களம், சீனம், பப்பரம், கொப்பம், வங்கம், சிங்களம், துளுவம், அங்கம், ஆரியம், திகத்தம், சேதி, கொங்கணம், கடாரம், கொங்கம், கூபகம், இரட்டம், ஒட்டம் என்னும் தேசத்தரசர்களும் இன்னும் பல வேறரசர்களும், வரம்பிலாப் பெரும்படைப்பெருக்குடன் வந்து கூடினர்.

ஆனல் நம் உதியஞ்சேரலாதனும் வந்தனனே என்றால், ஆம்; வந்தனன். எங்ஙனம்? வில்லும் வேலும் வாளும் ஏந்திய கல்லாமறவர் பல்லோருடனும், தேரும் பரியும் யானையும் நெருங்கிய சிறந்த சேனை எண்ணிறந்தன சூழவும் போரை விரும்பி மகிழ்ந்துவந்தனனே? இல்லை; இல்லை. பேரரசனாகிய இவனை நாம் துணைக்கொண்டால் போரில் எளிதில் வென்றிடலாம் என்றெண்ணி ஐவரும் இவனை அடைந்து வேண்டினர். அங்ஙனமே நூற்றுவரும் இவனைப் போற்றிநின்றனர். இந்நிலையில் என்னசெய்தான் நம் ஏந்தல்? ஒருவரைப் புறக்கணித்தொருவருக்குதவுதல் இவன்போன்ற பெருவேந்தருக்குத் தகுவதோ? ஆதலால் இருவருக்கும் உதவுவதாக வாக்களித்தான். ஆனல் ஒரு வேந்தன் இருவருக்குதவுவது எப்படி? தம் படைகளை இரு கூறாகப்பகுத்து இருதரப்பார்க்கும் கொடுத்து உதவுதல் கூடும். அங்ஙனம் செய்தல் தம் படைகளைத் தம்

படைகள் கொண்டே கொல்வதை ஒக்குமன்றோ? ஆகவே பேரறிவும், பெருங்குணமும் படைத்த வள்ளலாகிய நம் மன்னன், படைஉதவிப் பகைவருயிரை மாய்ப்பதைவிட மடையுதவி அவருயிரைக் காப்பதே மேலெனவும், இதுவே இருவருக்கும் ஒரே நிலையில் செய்யத்தக்க உதவி யெனவும் எண்ணினான். உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே; உண்டிமுதற்றே உணவின் பிண்டமாத லால். தத்தம் படைகளை யனுப்பி மன்னுயிரெல்லாம் மடியச்செய்த ஏனைய மன்னவர் செய்கையினும் உணவும் நீரும் உவப்புடன் ஊட்டி, சேனைப்பெருக்கைத் தன் தானப்பெருக்கால் காக்க எண்ணிய நம் காவலன் தகைமை கருதரிய பெருமையுடையதன்றோ?

தான் எண்ணியது முடிக்கப் பரிவாரங்களுடன் எழுந்தான். வேலும், வாளும் ஏந்திய வீரரெல்லாம் காயும் கனியும் ஏந்தினார்கள். முரசு தாங்கிய மருப்புடைக் களிறு கள் அரிசியோடு பருப்புப் பொதிகள் தாங்கின. வண்டிக ளெல்லாம் பாத்திர பண்டம். பரிசாரகர் எண்ணிலார் பக்கத்தே சூழ்ந்தனர். வரம்பிலாப் பெருஞ்செல்வத்தோ டும் ஏனைய பொருள்களோடும் புறப்பட்டுச் சென்றான் சேரவேந்தன்.

போரும் தொடங்கியது. விற்போர் தொடங்கு முன்னமே நெற்போர் குவிந்துவிட்டது. ஆற்றலோடு மலைவார்க்குச் சோற்றினாலாய மலை விளங்கித் தோன்றியது. வீரர்களெல்லாம் ஆரவாரத்துடன் வேண்டியவாறு உண்டு களித்துப் புத்துயிரும், புதுவலியும் பெற்றனர். இங்ஙனம் மிகைத்தெழுந்த இரு பெரும் சேனையும் பகைத்தழியு மட்டும் பெரு மகிழ்வுடன் பெருஞ் சோற்றுணவை வரை

யாது வழங்கினான் நம் சேரவள்ளல். பூபாரம் குறைக்க வென்றே உலகிற்றோன்றி, மாபாரதப் போர்மூட்டி, மன்னுயிர்கள் அத்தனையும் வாளுக்கிரையூட்டி தாம் எண்ணியது முடித்தான் கண்ணபிரான் என்று பாரதம் பகர்கின்றதென்றால் பூபாரம் குறைபடப் போரில் மடிந்தாரும், கலந்தவரில் எஞ்சியோரும் இத்துணையர் என்று மனத்தால் எண்ணவுங் கூடுமோ?

இவ்வளவாகப் பெருகிநின்ற இருதிறச் சேனைக்கும் ஒரு பகலன்று, இருபகலன்று, பதினெட்டுநாளளவும்—பாரதப்போர் முடியுமட்டும், பகை, நொதுமல், நட்பு எனும் பேதமின்றி உணவளித்தான் நம் உதியஞ்சேரல் என்றால் இவனது உதாரசிந்தையையும், வரையா ஈகையையும், வள்ளற்றன்மையையும் என்னென்று புகல்வது! என்னென்று புகழ்வது!

இவனது செல்வத்தினும், இவன் நாட்டினும், இவ்வுலகினும் பரந்துபட்டதன்றோ இவன் பெருந்தகைமை? இவனன்றோ அரசன்? இவனன்றோ வள்ளல்? இவன் குடைக்கீழ் வாழ்ந்தாரன்றோ குறைவில் தவமியற்றினார்? இம்மன்னர்பெருமான் புரிந்த அன்னதானத்தின் பயன் தான் ஏனை இருபெருவேந்தரும் இறந்தொழிந்திடவும், இவன்குலம் மாத்திரம் குன்றலில் சிறப்புடன் நின்று புகழுடையச்செய்கின்றதெனலாம்.

இத்தகைய பெருங் கொடைச் சிறப்பால் அன்று முதல் இவன் 'பெருஞ் சோற்றுதியஞ் சேரலாதன்' என்று புகழப்பட்டான். இவன் புகழ் அவனி எங்கணும் பரவியது. இவனைப்போல இவன் மரபிலுதித்த மாபெரு மன்னரும் பொன்றாப்புகழுடன் சிறப்புற்றுப் பொலிவாராக.

# 2. சேரமான் பெருஞ்சேரலாதன்.

---

செஞ்சொற் கவிஞர்களால் சிறப்பித்துக் கூறப்படுவதாய சேரநன்னாட்டிலே சிறந்து விளங்கிய மறமன்னன் சேரமான் பெருஞ்சேரலாதன். இவன், அழியும் உடம்பால் அழியாப் புகழ்தேடி நிறுவிச் சென்றவன். மானத்துக்கோர் வித்து; மறத்துக்கோர் பிறப்பிடம்; தானத்தின் வைப்பு; தயையின் இருப்பிடம்; ஆண்மையின் தோற்றம்; அன்பின் பெருக்கு.

அமைந்து வரும அருவிகளையுடைய இமயம வரைச சென்று விற்பொறி பொறித்து வெற்றியுடன் ஆண்ட தம் முன்னோரைப் போலவே இவனும் வீறுகொண்டு ஆள எண்ணினான். வடதிசைநோக்கிப் படையுடன் சென்றான். வேலினைக் கொண்ட வேந்தனைக் கண்டோர் காலனைக் காணல்போல் கடுந்துயர் கொண்டனர். தங்கள் இடம் பிடிக்கப்படப் போவதற் கறிகுறியாக அவர்கள் இடம் துடிக்க ஆரம்பித்தது. ஆயினும் என்ன? "மறமன்னரல்லரோ நாம்? வேற்றரசனைக் கண்டு போற்றி நிற்பதோ வீரம்? தம் கைவரிசை காட்டி நம் புரிசைமூதூர் பிடிக்க வந்த சேரனை, நாம் சேர நின்று வென்று ஒழிப்போம்" என்று கூறி எழுந்தார் சிலர். இங்ஙனம் இவன் ஆற்றலை மதியா மன்னரெல்லாம் காற்று அலை பஞ்செனக் கதிகலங்கினர். கறுவிநின்ற தண்டளிர் அரசுகள் சில பகலுக்குள் சண்டமாருதத்துக் காற்றாது தலைசாய்ந்தன.

நுண்மதி வாய்ந்த மன்னவர் சிலர் "இவன் சினந்து நோக்கிய இடமெல்லாம் செந்தீப் பறக்கும்; இவன் பகையைப் பெற்றுவிட்டால் பின் குகைக்குள் புகுந்தும் பிழைத்தல் அரிது; ஆதலின் இவன் செங்கண்ணைக் காணலை விட்டுப் பைங்கண் பார்த்தலே பிழைக்கும் வழி" என்றுணர்ந்து நல்லுரை கூறி அவனடியைத் தம் முடிக்கணிந்தார்கள். அவரெல்லாம் தம்முடைய நாட்டைத் தம்முடைமையாகப் பெற்று நலம்பெற வாழ்ந்தார்கள். இங்ஙனம் வானவர் பெருமான் அடைந்தாரை ஆதரித்தும், அடையாரை வானவர் நாடு அடைவித்தும் வெற்றிப் பெருக்குடன் சுற்றித்திரிந்து இறுதியில் சோணாட்டுள்ளே தன் கோல் நாட்ட எண்ணினான்.

வேணாட்டரசன் சோணாட்டுக்குள் புகுந்த காலத்தில் அந்நாட்டை ஆண்டவன் அருந்திறல் வேந்தனாகிய கரிகால் வளவன் ஆவன். இவனைப்பற்றிச் சற்றே தெரிந்து கொள்ள வேண்டுவது இன்றியமையாதது. இவன் இளஞ்சேட் சென்னியின் அருந்தவப் புதல்வன். கருவிலேயே திரு வுடையவன். இளமையில் தானே பேரரசனுக்குரிய இலக்கணங்கள் இவனிடம் பெருகிக் காணப்பட்டன. இவன் முககாந்தியும் பொலிவும் பெரிய தந்தையான சேட் சென்னியின் மனத்தே பொறாமைத் தீயை எழுப்பியது. இக்குழவியின் வளர்ச்சியால் தம்மக்கள் ஆட்சிக்குப் பங்கம் ஏற்படுமெனப் பயந்தான்.

> "இளைதாக முள்மரம் கொல்க களையுநர்
> கைகொல்லும் காழ்த்த விடத்து"

என்னும் நீதியைக் கடைப்பிடிக்கக் கருதினான். ஒரு நாள் இளஞ் சேட் சென்னியின் வீடு தீக்கிரையாயிற்று.

இளஞ்சேட் சென்னியும், அவன் மனைவியும், அதில் வெந்து நீருயினர். ஆனால் குழந்தை மாத்திரம் தன் அம்மானுய இரும்பிடர்த் தலையாரால் தப்புவிக்கப்பட்டது. குழந்தையின் கால், தீயினுல் கரிந்து போனமையால் அதற்குக் கரிகாலன் எனப்பெயர் வழங்கலாயிற்று.

இக்கரிகாலனே நம் மன்னனுக்குப் பெரிய காலனாக வளர்ந்தவன். இவன் நீதியும் வீரமும் நிறையப் பெற்றவன். பல வேந்தரையும் வென்று வெற்றி மன்னனாக விளங்கினான். இமயம்வரைச் சென்று இடையிலுள்ள அரசர்களையெல்லாம் வென்று இமயத்தே தம் புலிக்கொடி நாட்டித் திரும்பினான். தமிழ்ப்பற்று மிக்குடையவன். தம்மைச் சிறப்பித்துப் பட்டினப்பாலை பாடிய 'கடியலூர் உருத்திரங் கண்ணனரு'க்குப் பதினாறு நூறாயிரம் (16 இலட்சம்) பொன் பரிசளித்தான். இவனைப் பற்றிய வரலாறுகள் பலவுள.

நிற்க, சேரன் படையெடுத்துத் தன் நாட்டுக்குள் நுழைந்ததை இவன் உணர்ந்தான். உடனே அவனைத் தடுத்து நிறுத்த எண்ணி, தன் பெருஞ் சேனையைத் திரட்டிக் கொண்டு சென்றான். வெண்ணி என்னுமிடத்தே சேரன் வந்து கொண்டிருப்பதைக் கண்டான். அவனை அங்கு வைத்தே தாக்க எண்ணினான். இது சேரனுக்கு மகிழ்ச்சிதான். புகார் வரையும் போகவேண்டியதில்லையன்றோ? ஆகவே சேரன் மகிழ்வுடன் தாக்கினான்; சோழன் அச்சத்துடன் எதிர்த்து நின்றான். இருபெரும் சேனைக்கும் பேரமர் விளைந்தது. பேரரசர்கள் தம்முள் போர்தொடுத்தால் என்னென்ன விளையும் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ? எங்கும் பிணங்கள், நிணக்கு

வியல்கள், குருதிஆறுகள், குடர்மாலைகள், யானைமலைகள். சோழன் படைகள் சுருங்கலாயின.

பின்னும் சோழன் அஞ்சாமல் எதிர்த்து நிற்பதைக் கண்ட சேரன் முன்னிலும் பன்மடங்கு சினங்கொண்டு, ஊழிக்கடையில் தானொருவனுகவே நின்று உயிர்களை யெல்லாம் அழித்து நடனம் புரிகின்ற உருத்திர மூர்த்தியைப்போல, யானையினின்றிழிந்து கையில் வாட்படைஏந்தி எதிர்ப்பட்ட உயிர்களையெல்லாம் எமபுரம் அனுப்பிக் களத்தைத் தனதாக ஆக்கி வரலானுன். பார்த்தான் கரிகாலன். அப்போது அவன் காலைப்போல முகமும் கருக ஆரம்பித்தது. அவனும் நிலத்திலிறங்கினுன். காலனெனக் கனன்று நோக்கினுன். மூலபுருடனை முடிக்க எண்ணினுன். வேலினைக் கையில் விளங்கத் தாங்கினுன். தூலவுடம்பினைத் துளைக்க எவினுன்.

காற்றினும் கடுகிச் சுழன்று சென்றவேல் சேரன் தடுப்பதற்குமுன் அவன் மார்பினில் தைத்தது. ஆனல் வீரமே உருவாய நெஞ்சில் தங்க அஞ்சிய அச்சிறு கைவேல், அனுமதியின்றி உள்ளே நுழைந்த அற்பன், வீட்டார்க்கஞ்சிப் புழைக்கடைவழியே வெளிப்பட்டோடுவதுபோலப் பின்புறமாக உருவிச்சென்று தப்பியது. அவன் உடலில் நிலைத்து நின்று உயிரை உறிஞ்சுவதற்கென்று வந்த அது, தான் தப்பியதே தம்பிரான் புண்ணியமென்றுபோல ஓடி மறைந்துகொள்ளவே போரும் நின்றது. தன் வஞ்சகச் செய்கையால் சேரனைப் போர்புரிய ஒட்டாமல் தடுக்க முடிந்ததே ஒழிய உயிருக்கு ஏதும் ஏதம் செய்ய அதனுல் இயலவில்லை.

தன்னெஞ்சில் வேல் பாய்ந்ததைக் கண்டு வீரன் மகிழ்ந்தான். விழுப்புண் படாத நாளெல்லாம் வீரர்க்கு வீணாளன்றோ? ஆனால் அம்மகிழ்ச்சி நிலைத்து நிற்கவில்லை. மறுகணமே அது மாயமாய் மறைந்தது. நெஞ்சில் பாய்ந்த வேலைப்பிடுங்கக் கையால் தடவினான். அது கைக்கு எட்டவில்லை. கிட்டியிருந்தால் அக்கணமே கரிகாலனுயிர் காற்றில் பறந்திருக்கும். அது ஊடுருவிச் சென்றதென்பதைப் பின்னரே உணர்ந்தான். தன்னுயிரே போய் விட்டதாக எண்ணினான். மானமிழந்த பின் வாழ்தல் ஈனமன்றோ? தன்னுயிரை மாய்த்துவிடுவதெனத் தீர் மானித்தான். மிகத் தளர்ச்சியுற்று நின்றான்.

இதற்குள், வீரர் அமைச்சர் முதலியோர் ஒருங்கு கூடினர். “வேந்தே! புண்பட்டால் பூரிப்படையும் தாங்கள் பொருமி நிற்பதேன்? காயம் மிகப்பெரிதோ?’

“காயத்தைப்பெரிதாயெண்ணித் தளர்பவன் நானோ? இல்லை, இல்லை. இதோ என் முதுகைப் பாருங்கள்.”

(வியப்புடன்) “ஆம். வேல் ஊடுருவிப்பாய்ந்து பெரும் புண் செய்துள்ளது. ஆயினும் இதை வெகு விரைவில் ஆற்றிவிடலாம்.”

(பரிகாசமாகச் சிரித்து) “நன்று. என் அவமானத்தை யும் மாற்றிவிடுவீர்களோ?”

(திகைப்படைந்து) “என்ன? அவமானமா? விழுப் புண்பட்ட தங்கள் புகழ் செழிப்புற்று வளர்வதன்றி அவமானமேது?”

(மனம்தளர்ந்து) “அமைச்சே! புறப்புண்பட்டோ னுக்குப் புகழுமுண்டோ? இனி இறப்பதே நன்று.”

“வேந்தே! தாங்கள் கூறுவதன் பொருள் புரியவில்லை. மார்பிலே வேலேற்றும் அதனால் சற்றும் தளராது, முருகனால் துளையுண்ட கிரௌஞ்ச கிரிபோல அசைவற்று நின்ற தாங்கள் மானமிழந்தவர்போல் மதிமயக்கம் கொள்வதேன்? நெஞ்சில் எறிந்தவேல் முதுகு வழி ஓடி மறைந்தது; பின்னும் அயராது நின்ற தங்கள் வீரமன்றோ வீரம்? தங்கள் புகழை மூவுலகும் ஏத்துமே”...........

“போதும், போதும்; என் புகழை நீங்கள் தான் கொண்டாட வேண்டும்; நெஞ்சில் வேல் பாய்ந்ததாக நீங்கள் கூறிக்கொள்வீர்களேயன்றி நம் பகைவர் இதனை ஒப்புவார்களோ? ‘எங்கள் போருக்காற்றாது சேரன் முதுகிட்டோடினான்; அவன் முதுகிலெறிந்த வேல் மார்பையும் துளைத்துச் சென்றது; அதனைப் பொறுத்தும் மானமிழந்து வாழ்ந்திருக்கின்றான்’ என்று தூற்றுவார்களன்றோ? அப்போது புகழெங்கே? பூசை எங்கே? ஆகவே, நான் இனி என்னுயிரை வைத்திருக்கப் போவதில்லை; இப்போர்க் களத்திலேயே வடக்கிருந்து உயிர் மாய்க்கத் துணிந்தேன்; அதற்கு இடம் முதலியன இப்போதே சித்தஞ் செய்யுங்கள்” என்று மிக்க துணிவுடன் கூறினான் வேந்தர்பிரான்.

அமைச்சர் முதலியோர் எவ்வளவோ சொல்லியும் பயனில்லை. இடம் ஒதுக்கப்பட்டது. மோனிலை உலகம் அடைய விரும்பி, இவ்வுலக நுகர்ச்சியை அறவே துறந்து விரதத்தால் உடலை மெலிவித்து, வெயில், மழை, பனி, காற்று யாவும் ஏற்று வடதிசை நோக்கியிருந்து சிறுகச் சிறுகத் தன்னுயிரை மாய்க்கத் துணிந்த மறமன்னன்,

தனக்கென ஒதுக்கப்பட்ட இடத்தே வடதிசை நோக்கி உட்கார்ந்தான். நாட்கள் பல செல்லச்செல்ல அவனுடல் மெலிந்து உயிர் தேய ஆரம்பித்தது. ஆனால், பூத உடம்பு தேயத்தேய புகழுடம்பு வளரலானது.

† "நத்தம்போற் கேடும் உளதாகும் சாக்காடும்
வித்தகர்க் கல்லால் அரிது" என்னும்

மெய்ம்மறையை ஒப்ப நின்றான் நம் மறமன்னன்.

இவன் வடக்கிருந்தபோது இவன் நிலையைக்கண்டு புலம்பிக் கண்ணீர்வடித்த 'கழாத்தலையார்' என்னும் புலவர் "வேந்தர் வேந்தே! நீ இந்நிலையை அடைந்தமையால் எல்லாம் சிறப்பிழந்தன; முழவு என்னும் வாத்தியம் முழக்க வேண்டியதில்லாமையால் அது மார்ச்சனை யிடுவதை ஒழிந்தது; யாழோ இசையை மறந்தது; பால் கறப்பாரும், காய்ச்சிக் கடைவாரும் இல்லாமையால் பானைகளெல்லாம் கவிழ்ந்தன; தம்முடைய சுற்றத்தார்களோ மதுவை மறந்தார்கள்; உழவர் உழவை மறந்தனர்; அகன்ற தெருவினையுடைய சீறூரெல்லாம் திருவிழாச் செய்தலைத் தவிர்ந்தன; நீயோ, முழுமதி தோன்றும் உவவு நாளின் மாலையில் ஞாயிறும் திங்களுமாகிய இருசுடரும் தம்முள் எதிரே நின்று பார்த்து, அவற்றுள் வெஞ்சுடராகிய சூரியன், மேல் கடல் மறைந்தாற்போல உன்னை நீயே மறைக்கத் துணிந்தாய்; நீ மிக்க மானமுடையவனென்பதை அறிந்துகொண்ட நின்னையொத்த மன்னன், வேண்டுமென்று கருதி எறிந்ததனால் உண்டான புறப்புண்ணுக்கு நாணி வாளுடனே வடக்கிருக்கலானாய்;

† குறள் 235.

ஆதலால், ஞாயிற்றைப்போன்ற நீ இல்லாத நாள் எனக்கு நாளாகக் கழியவில்லை; யுகமாகச் செல்கின்றது'' என்று கூறுகின்றார்.

இச்சேரலாதனின் செவ்விய குணத்தைக் கண்டு வியந்து, வெண்ணி என்னு மூரிலுள்ள குயச் சாதியிற் பிறந்த 'வெண்ணிக் குயத்தியார்' என்ற பெண்புலவர், தம் நண்பனுய சோழன் கரிகாலனைப் புகழ்கின்ற முகமாக

"களியியல் யானைக் கரிகால் வளவ!
சென்றமர்க் கடந்தநின் ஆற்றல் தோன்ற
வென்றோய! நின்னினும் நல்லன் அன்றே?
கலிகொள் யாணர் வெண்ணிப் பறந்தலை
மிகப்புகழ் உலகம் எய்திப்
புறப்புண் நாணி வடக்கிருந் தோனே" என்று

கூறுகின்றார். "களி மயக்கங்கொண்ட யானைகளையுடைய கரிகால் வளவனே! மதங்கொண்ட யானை, செய்வகை அறியாது, நன்மை தீமை ஆயாது, மிகை பல செய்வதுபோல நீயும் மதம்பட்டுச் சேரன் வீரத்தையும் மானத்தையும் கறைப்படுத்தினாய்; இத்தகையதே நின் ஆற்றல்; இவ்வாற்றல் தோன்றுமாறு வெண்ணிப் போர்க் களத்தே வெற்றிகொண்டவனே! வேண்டுமென்று புறப் புண்படச்செய்த நினக்கு நற்புத்தி புகட்டுபவன் போல தன்புகழ் உலகெல்லாம் பரக்க, மானங் காத்தற்கென்று அக்களத்தில் தானே வாளுடன் வடக்கிருந்த சேரன், மானம் போக்கிய நின்னைவிட மிகவும் நல்ல னல்லனோ?" என்று மிக அழகாக உண்மையைப்

† புறநா. 66.

பொதிந்து புகழ்கின்ற நயம் ஆராய்ந்து இன்புறத் தகுவதாகும். கரிகாலனது நண்பரே அவன் பகைவனைப் புகழ்வாராஞல் சேரன் பெருமைக்கு வேறென்ன ஆதாரம் வேண்டும்? தவறுதலாகவேனும் உலகம் பழித்தல் கூடுமென்று அஞ்சி இன்னுயிர் துறக்கத் துணிந்த நம் மன்னவன் பெருமை எல்லையற்றது. மானம் வரின் உயிர்விடுதல் மறமன்னருக்கு இயல்பென்பதை உலகுக்குக் காட்டிச்சென்ருன் சேரர்பிரான்.

# 3. சேரன் செங்குட்டுவன்.

முடியுடை அரசர் மூவருள்ளும் முடியாப் பெருமை படைத்தவன் சேரன் செங்குட்டுவன். இவன் சேரர் புகழ் பாரத நாடெங்கும் பரவச்செய்தவன்; பத்தினிப் பெண்டிர் படிவமாயமைக்கப்பெற்று வழிபடத் தகுந்தவரென்பதை உலகுக்குக் காட்டிநின்றவன்; வட வாரியரிடைத் தமிழர் மானங்காத்த தனிப்பெருவீரன்; பெருமலை இமையத்துச்சியிலும், அலைகடற்கப்பால் நாட்டு மலைகளிலும் விற்பொறி பொறித்த ஒப்பிலாதவன்.

இவனது முன்னோன் நெடுஞ்சேரலாதன் என்பான். செங்குட்டுவனும் 'இளங்கோ' என்று பெயருடைய இவன் தம்பியும் நெடுஞ்சேரலாதனுக்கு மக்கள் என்பர். அது பொருந்தாது என்றும், சேரலாதனுக்குச் செங்குட்டுவன் மருமகன் என்றும் கூறுவர் வேறுசிலர். பதிற்றுப்பத்து என்னும் நூலில் சேரன் செங்குட்டுவனைப்பற்றிப் புலவர் பிரானாய பரணர் பாடிய ஐந்தாம் பத்தின் பதிகத்தில்

† "வடவ ருட்கும் வான்றோய் வெல்கொடிக்
குடவர் கோமான் நெடுஞ்சேர லாதற்குச்
சோழன் மணக்கிள்ளி...... .....ஈன்றமகன்" என்று

காணப்படுகிறது. இதில் நெடுஞ்சேரலாதனின் மகன் என்று சொல்லாமல் நெடுஞ்சேரலாதனுக்குச் சோழன் பெற்ற மகன் என்று கூறுவதால், இப்போதுள்ள மருமக்கள்தாய முறைப்படி சேரலாதனுக்கு வழித் தோன்றலாக (வாரிசாக) சோழன் மணக்கிள்ளி என்பவன்,

---

† பதிற்றுப். 5-ம் பத்-பதிகம் 1—3

நெடுஞ்சேரலாதனின் உடன்பிறந்தவளை மணந்து பெற்ற மகன் குட்டுவன் என்று பொருள் கொண்டு, நெடுஞ் சேரலாதனுக்குச் செங்குட்டுவன் மருமகனென்றும், தொன்றுதொட்டே சேரர்குலம் மருமக்கட்டாய முறையுடையதென்றும், பதிற்றுப்பத்தின் ஏனைய பத்துக்களில் காட்டியுள்ள அரசர் வழிகளும் இந்த முறை பற்றியதே என்றும், இந்தப்பாடலின் கடைசி அடியில் இக்கருத்தைத் இன்னும் தெளிவாக்குவதற்கு வேண்டிய 'தேவி நற்சோணை' என்னும் சொற்கள் புள்ளியிட்ட இடத்தில் விடுபட்டிருக்க வேண்டுமென்றும் மற்றும் பல ஆராய்ச்சிகளோடும் ஆதாரங்களோடும் காட்டுகின்றார் திரு. சோமசுந்தர பாரதியாரெனும் பெரியார் தமது 'சேரர் தாயமுறை' என்னும் நூலில். இந்நியாயம் எங்ஙனமாயினும் நெடுஞ்சேரலாதனுக்குப் பின்னர் அரசேறியவன் செங்குட்டுவன் என்பது தெளிவு. இவன் தம்பி இளங்கோவைப் பற்றிப் பின்னர்க் கூறுவோம்.

இவன் செந்நிறமான அழகிய மேனியைப் படைத்தவன். ஆதலால் செங்குட்டுவன் எனப்பட்டான். இவன் உடலழகோடு உள்ளத்தழகும் ஒருங்கே பெற்றவன்: கடவுள் பத்தி இவன் உடன் பிறப்பு; தாயினிடமும் முனிவர் அந்தணர் முதலியோரிடமும் கொண்டிருந்த பத்தி கூறும் தரமுடையதன்று. இவன் பாவலர் இன்னல் துடைக்கும் பண்பினன். பாடிவந்தோர்க்குக் கோடியும் கொடுப்பன், அதன்மேலும் கொடுப்பன். தன்னைப் பத்துப் பாடல்களால் சிறப்பித்துப் பாடிய பரணருக்கு 'உம்பற்காடு' என்னும் சேரநாட்டுப் பகுதியின் வருவாயினையும், தன்

மகன் குட்டுவன் சேரலையும் பரிசிலாகக் கொடுத்தா னென்றால், இவன் வள்ளன்மைக்கோர் எல்லையுண்டோ?

† 'அருந்திறல் அரசர் முறைசெயின் அல்லது
பெரும்பெயர்ப் பெண்டிர்க்குக் கற்புச் சிறவாது.' ஆதலால், நீதி வழுவா நெறிமுறையில் நின்று செங்கோல் ஓச்சிப் பாரெங்கும் கற்பு மணம் கமழக் காவல் காத்து வந்தான். குடிகளெல்லாம் கண்டு வியந்து பின்பற்றுமாறு தானும் கற்புநெறியில் நின்று ஏக பத்தினி விரதம் காத்தான். இக்குணம் பெரும்பான்மையான அரசர்களி டத்தும் அமையப்பெறாத் தனிப் பெருங்குணமாகும். இவனது காதற் பத்தினி இளங்கோ வேண்மாள் அழகு, அறிவு, ஒழுக்கம் எல்லாம் ஒருங்கமையப்பெற்றவள். தன் நாயகனை தனக்குயிர் என்றெண்ணிய நற்குணப் பெண்டு. உற்ற சமயங்களில் உசிதமான முறையில் உறுதிகூறும் ஆற்றல் வாய்ந்தவள். நிற்க.

செங்குட்டுவனது குணங்கள் யாவற்றினும் மேலாக விளங்குவது அவனது வீரமேயாகும். வஞ்சினம் கூறி அதைச்செய்து முடிக்கும் வன்மைவாய்ந்தவன் நம் வஞ்சிமன்னன். மானமே அவனது உயிர்; வீரமே அவனது உடல். தமிழ்நாடு ஒரு காலத்தில் மேன்மையான நிலையை அடைந்திருந்ததென்றால், அது இவனது ஆட்சிக்காலத்தே அன்றி வேறில்லை. இவன் ஆற்றலுக்கு இணையாகச் சொல்லத்தகுந்தவர் எவரு மில்லையென்றே கூறலாம்.

இவன் தந்தை இறந்ததும் தாயான நற்சோணையு மக்கணமே உயிர் துறந்தாள் பத்தினிப்பெண் ஆகையினால்.

---

† சிலப். 28 நடுகற். 207, 208.

காதலர் இறந்தால், தீ மிகுந்து எரிகின்ற கொல்லனது உலையில் ஊதுகின்ற துருத்திபோல வெவ்விய பெருமூச்சுக்கொண்டு, உயிர் அகத்தே அடங்கப் பெறாமல் அந்நிமிடமே புறத்துவிடுவர்; இல்லாவிட்டால் கணவனுடல் வைத்துக்கொளுத்தப்படுகின்ற சிதையில், குளிர்ந்த நீர்ப்பொய்கையிலிறங்கிக் குதூகலமாகக் குளிப்பதுபோல உடனமர்ந்து உயிர் நீப்பர். இதுவுமின்றேல், மேனுலகத்தில் கணவனுடன் உறைந்து வாழ்வதற்காக நோன்புகளிருந்து உடலைவருத்தி இறுதியில் உயிர் விடுவர். இத்தகையோரே பத்தினிப் பெண்டிரெனப் பகரப்படுபவர். இவர் இறந்தபின்னர் இவரது புகழ் என்றும் நிலவும் பொருட்டுச் சிறந்த கல் ஒன்று எடுத்து, அதில் அவர் பேரும், பெருமையும், உருவும் வரைவதுண்டு. இதற்கு, ஏற்ற கல்லொன்று முதலில் தேடிக் காணலும்; பூவொடு நீர் தூவி விரைபுகைத்து மணியோசையெழுப்பி வழிபட்டுக் கல்லைக் கொண்டுவருதலும்; நறுமணம் கமழும் மஞ்சனமாட்டிப் புண்ணிய நீரிலே மூழ்குவித்தெடுத்தலும்; உருவும், திருவும், பெயரும் வரைந்து கல் நடுதலும்; மாலையணிந்து பீலிசூட்டி, பூவும் புகையும் பொங்கலும் சொரிந்து சிறப்புச்செய்தலும்; வாழ்த்தெடுத்தலும் பண்டைத் தமிழர் மரபு.

இம்முறைப்படியே, கற்புக் கடன் பூண்ட தன் பத்தினித்தாய்க்குக் கல்லெடுத்து விழாக் கொண்டாட எண்ணிய செங்குட்டுவனும் அதனைப் புண்ணிய நீராய கங்கையிலே நீராட்டக்கருதினன். தன் நால்வகைப் படையும் நாடெங்கும் பரக்க, பேரிகை முரசம் முதலிய வாத்தியங்கள் பேரிடியென முழங்க, அமைச்சர், புரோகிதர்,

சேனாபதியர், தூதுவர், ஒற்றர் என்னும் ஐம்பெருங் குழுவும் தன்னை அணுகிவர, ஊர்தியில் கல்லையேற்றிப் பொற்றேரில் தானமர்ந்து பன்னெடுநாள் பயணப்பட்டுக் கங்கையை நோக்கிச் செல்வானாயினன்.

அப்போது குட்டுவன் ஆற்றலையறியா ஆரிய மன்னர் சிலர் "இவனது முன்னோனும் இவனும் வெற்றி வேந்தர் போல் நடிக்கின்றார்களே! தமிழர் வீரம் தெரியாதோ நமக்கு? அப்போது—நாமில்லாக்காலத்தில் இவன் முன்னோன் நெடுஞ்சேரலாதன் இமையத்தில் வந்து தன் விற்பொறியைப் பொறித்துச் சென்றான்; நாம் மட்டும் இருந்திருந்தால் கங்கை கடந்து செல்வானோ சேரன்? இப்போதும் என்ன? நம் காலத்தில் வந்தானில்லையே வானவன் என்று ஏங்கியிருந்த நம்முன் இப்போது வலுவில் வந்தகப்பட்டான்; பாவம்! இவனும் தன் ஆற்றல் காட்ட வந்தான்போலும்; கங்கையாற்றில் காட்டட்டும் இவனது பொங்கிய ஆற்றலை; இவன் நாட்டில் இவன் வீராதி வீரனாயிருக்கலாம்; நம்மிடம் செல்லுமோ அது? தரையில் ஓடுகின்ற வன்கால் நெடுந்தேர் கடலில் ஓடுமோ? ஆழமறியாது கால் வைத்தானிவன்" என்று கூறி ஏளனம் செய்து, "இவன் கொட்டமடக்கி வீரமொடுக்கி, ஆற்றலழித்து, முடித்தலை துணிப்போம்" என முனைந் தெழுந்து வந்தனர்.

அங்ஙனம் திரண்டு வந்த மன்னரையும், அவர் சேனைகளையும் ஒருதானாகி நின்று தன் வாளுக்கிரையூட்டி, கரிய நீர்க் கங்கையென்னும் பெரியசீர் நங்கைக்குச் சொரிந்த செங்குருதி யென்னும் ஆடையணிந்து, அம் மன்னவரது

பொன்முடிகளை அவள் கால்களுக் கணியாக்கினான். அம் மன்னருக் கெல்லாம் தானே பிதிர்க்கடன் செய்வோன் போல நின்று அவருடல்களைக் கங்கையில் மூழ்குவித்துக் கடலிற் சேர்ப்பித்தான். எதிர்த்த மன்னரெல்லாம் ஒரு பகலுக்குள் மாய்ந்தொழிந்தனர். பகையு மொழிந்தது. செந்தமிழ் வீரம் சிறப்புறக் காட்டி வென்றி வீரனாய்க் கன்னிப்போர் முடித்துக் கன்னீராட்டித் தன்னாடு திரும்பினான் நம் மன்னர்பெருமான். நாடு சேர்ந்ததும் கல்விழாச் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது.

இவன் வடநாடு சென்று வென்று மீண்டதை அறிந்தனர் சோழனும் பாண்டியனும். "தமிழர் மானம் காக்கத் தக்கவனிவனோ? இவன் என்ன? நம்மினும் வீரனோ? ஆயின், பார்ப்போம் ஒரு கை" என்று இருவரும் இவன்பால் பொறாமைகொண்டு பகைத்தெழுந்து கொங்கர் செங்களத்தே கூடி இவனை எதிர்த்தனர். வீரவேந்தனாய குட்டுவனை யெதிர்த்த குலவேந்தர் எக்கதியடைவரெனக் கூறவும் வேண்டுமோ? அவர் யாவரும் அழிந்தவாற்றையும் வானவன் வென்றவாற்றையும் காரணமமைந்த காசறு புலவராய பரணரென்பார் மிக அழகாகப் பகர்கின்றார். கிம்புரி என்னும் பூண் செறிக்கப்பட்ட கொம்புகளையும் பெரிய கையையுமுடைய கரிய யானைகளே மேகங்களாகவும்; வஞ்சினம் கூறி வெல்லும் வன்மை வாய்ந்த மறவர்கள் பகைவரை வெட்டிவீழ்த்தச் சுழற்றுகின்ற வாட்களே மின்னலாகவும்; விளங்கும் குறுந் தடியினா லடிக்கப் படுகின்ற இரத்தப் பலிகொண்ட வீரமுரசங்களின் ஓசையே அரசர்களாகிய பாம்புகளை நடுங்கச் செய்கின்ற இடி முழக்கமாகவும் நின்று அச்சுறுத்தும் போதில், மிக்க

விசையுடன் பாய்ந்து செல்லும் பரிகளே வன்காற்றாய்த் தாவிப் பரக்க, வலியவிற்கள் அம்புகளாகிய மழைத் துளிகளைப் பொழியலாயின. அதனால் குருதிநீர் பரந்த போர்க்களமாகிய ஈர வயலில் தேரையே ஏராகக் கொண்டு உழுது, கலப்பையாகிய படைவாளால் கீழ்மேலாக மறிக்கப்பட்ட படைச்சாலில் வேல், கணையம் முதலியவற்றை வித்துக்களாக விதைத்து, விழுமிய தலைகள் வெட்டப்பட்டுக் குறையுடற் பிண்டங்களாய் நின்றாடும் கவந்தங்களாகிய பசிய பயிர்களைப் பேய்களாகிய அறுவடை செய்வோர் பொறுக்கிப் போராகச் சேர்க்க, பூதங்கள் காவல் செய்ய, அச்செங்களத்தைத் தங்களமாக்கி, பாடும் புலவர்க்குப் பீடுடையாளனாய் வீற்றிருந்தான் வேந்தர்பிரான்' என்கின்றார்.

தங்கள் நாடு நாடிவந்தவனை எளிதில் வென்றுவிட எண்ணிய வடவாரிய மன்னர் கதியினை அறிந்தும், இரு பெருவேந்தரும் ஒருங்குகூடி எதிர்த்துப் போருக்காற்றாது அழிந்தமையை அறிந்தும், உணர்வுபெறாது பகைமை பூண்டான் இன்னொரு வேந்தன். அவன் பகையுணர்ச்சிக்கு வலிமையும் இல்லாமலில்லை. என்னவென்றால், நாற்புறமும் கருங்கடலையே தனக்குக் காவலாகக்கொண்ட நாடுடைக் காவலன் அவன். ஆகவே, கடல் கடந்து தன்னை வெல்வோர் எவருமில்லை யென்று தருக்கியிருந்தான். குட்டுவ வேந்தன் மலைநாட்டுக் கிறைவனும்,கடலலை தன் கால்கழுவ நிற்கும் வஞ்சிநாட்டு மன்னவனுமன்றோ? போர்த்துகேசியர் தம் நாட்டிலிறங்கிப் பலபடப் பேசியபோது 'உங்கள் கப்பல்களுக்கும் நாகரிகக் கருவிகளுக்கு மஞ்சோம்; வஞ்சிதேசத்தவராய எங்குடிகளொவ்வொருவரும்

ஒவ்வொரு வஞ்சியிலேறி உங்களைப் பிடித்துக் கரு வறுக்கும் வன்மை வாய்ந்தவர்' என்று வஞ்சினங்கூறிய சேரர்குலத் தோன்றலின் முன்னோனைய குட்டுவனோ இம் மன்னனுக் கஞ்சுபவன்? கொந்தளித் தெழுகின்ற அலைகளை உடைத்தெறிந்து உட்புகும் வன்மை வாய்ந்த மரக்கலங் கள் பல சித்தஞ் செய்யப்பட்டன. அவற்றில் தன் வீரர் களுடன் ஏறிக் கருங்கட லாற்றலடக்கி அந்நாடடைந்து அவ்வரசனை அவன் குலத்தோடும் அழித்து ஒரு பகலுக்குள் வாகைமாலை சூடி மீண்டான்.

இதனை, "மேகம் முகந்து கொள்வதால் குறையாதும், மழைநீரானது பல யாறுகள் வழிப் புகுவதால் நிறையா தும், காற்றினலே எழுப்பப்பட்டு முழங்கும் அலைகளை யுடைய குளிர்ந்த கடலின் வலிய ஆற்றலைக் கெடுத்து அதனுட் புகுந்து, அதனையே அரணுகக் கொண்டிருந்த பகைவரை ஒளிவிடுகின்ற வேலினல் நீ வென்றதைப் போல் இதற்குமுன் இயற்றினர் உளரோ என்றால், முன்னு மில்லை; இனி மேலுண்டாகப் போவதுமில்லை" என்று பாவலர் பிரானுய பரணர் கூறுகின்றார்.

குட்டுவ வேந்தன் தன்பால் நட்டவர் பொருட்டு, வேண்டிவந்தால் உயிரையும் ஈயும் உத்தம இயல் வாய்ந் தவன். இதனை விளக்க அடியில் வரும் நிகழ்ச்சி போது மானது. பழையன் என்பவன் பாண்டிய மன்னனது படைத்தலைவன். படைத் தலைவனேனும் 'மோகூர்' என்னு மூருக்கு அரசனுயு மிருந்தான். ஆகவே, இவன் 'மோகூர்' எனவும் அழைக்கப்படுவான். இவன் மிகுந்த வீர முடையவன். பாண்டியனுடைய தாரும், பொறியும்,

கொடியுமே இவனுடையனவும். மோரிய அரசர் வட
திசையிற் பல நாடுகளை வென்று, தென்றிசை நோக்கி
விசயம் செய்தபோது பழையனைப் பணிவிக்க எண்ணி
னர். பொதியமலைப் பக்கத்தே இருபெருஞ் சேனைக்கும்
அரும்போர் நடந்தது. வடநாட்டவர் வீரம் தமிழ்
மன்னனிடம் பலிக்குமோ? வெற்றியின்றி வீணே
திரும்பினர் மோரியர். அங்ஙனம் சென்றவருள் அறுகை
என்பான் ஒருவன். இவன் செங்குட்டுவனின் உழுவலன்பன்.
நெடுந்தூரத்திலிருந்த தன் நண்பன் அறுகையின்
பகைவனான பழையனைத் தானும் பகைத்து அழிக்கக்
கருதினான். அவன்மேல் படையெடுத்துச் சென்று அவனது
சேனைகளைச் சின்னபின்னப்படுத்தி, காவல் மரமாகிய
வேம்பினை முரசினுக்காகுமாறு கண்டதுண்டமாக வெட்டி
வீழ்த்தினான். அப்பழையனது பெண்களின் நறுங் கூந்தலை
நறுக்கியெடுத்துக் கயிறு திரித்து, போரில் வென்று தன்ன
தாகக் கொண்ட அவன் யானைகளையே கடாக்களாகக்
கொண்டு, இக்கயிறுபூட்டி வண்டியிழுப்பித்தான். இங்ஙனம்
தனதன்பனாகிய அறுகையின் பொருட்டு மோகூர்
மன்னன் முடித் தலையொடித்து வெற்றிகொண்டு அவன்
மானங்காத்தனன் நம் மன்னவனென்றால், இவன் நட்பின்
திறம் நாட்டோரெல்லாம் நாடி வியக்கும் தன்மைய
தன்றோ? இவையேயன்றி, 'நேரிவாயில்' என்னுமிடத்தில்
சோழமன்னரொன்பதின்மரை ஒரு பகலழித்து ஒரு
வழிப்படுத்தது முதலிய இவனது வீரச் செயல்கள்
இன்னும் விரிக்கிற் பெருகிச் செல்லுமாதலின் இத்துடன்
நிறுத்தி, இவன் காலத்து நிகழ்ந்த முக்கிய நிகழ்ச்சி
யொன்று கூறுவாம்.

தமிழ்த் தாயின் வயிற்றிலே தோன்றிய எவருட், அத்தேவிக்கணிந்த ஐவகை அணிகளென்னும் காப்பியங்கள் ஐந்தனுள் சிறந்ததாய சிலப்பதிகாரத்தைப் பற்றித் தெரியாமலிரார். இச்சிலம்பென்னும் செவ்விய அணியை ஆக்கித் தம் தாய்க்கணிந்த தேவசிற்பி, நம் சேரநாடு சிறக்கத்தோன்றிய செங்குட்டுவ வேந்தன் தம்பியான இளங்கோவடிகள் என்றால், நமக்குள்ள பெருமைக்கோர் எல்லையுமுண்டோ? இச்சித்திரச் சிலம்பின் உள்ளிடு முத்தாய் விளங்குபவள் கற்புக்கடன் பூண்ட பொற்புடைத் தெய்வமாய கண்ணகி. முத்தைப் பொதிந்த ஆடகப் பொன்னாலாகிய அழகிய குடைபோன்றவன் கோவலன். அதன் மேலழுத்தப்பெற்ற மத்தகமணி போன்றவன் குட்டுவன். சிலப்பதிகாரத்தில் இம்மூவரே முக்கியமானவர். கண்ணகியென்னும் கற்புடையணங்கு தோன்றியது சோணாட்டில். கோவலனை யிழந்து தன் மறக் கற்பைக் காட்டி மன்ன னுயிரைக் கொண்டது மதுரைப்பதி மேவிய பாண்டிநாட்டில். விண்ணோரேத்த மேனுலகம் சென்றதும் மண்ணோரேத்தக் கல்லில் பொருந்தியது சேர நாட்டில். கன்னட்டு விழாக்கோள் செய்தவன் நம் சேரநாட்டிறையாய செங்குட்டுவனாவன்.

மதுரை மன்னன், கோவலனைக் கள்வனென் றெண்ணிக் கொன்றுவிட, அதனை யறிந்த கண்ணகி, அரசன்முன் வாதிட்டுத் தன் கணவன் கள்வனல்லனென் பதையும, வழுதிகோல் வளைந்த வகையையும் எடுத்துக் காட்டி அவனுயிர் நீங்கச்செய்து வெளிப்போந்து, மதுரைமாநகரைத் தீக்கிரையாக்கிப் பின்னும் தன் கோப மடங்கப்பெறாதவளாய், விரிந்த கருங்குழலும், சொரிந்த

கண்ணீரும், மாசுபடிந்த மேனியும், தூசுநிறைந்த துகிலும் உடையளாய்க் காடும் நாடும் மலையும் மணலும் மேடும் குழியும் எங்கணுமாகக் கால் நடந்த வழியே சென்று கடைசியில் பதினாலாம் நாள் சேரநாட்டு மலையின்கணுள்ள 'திருச்செங்கோடு' என்னும் இடத்தை யடைந்து ஒரு வேங்கை மரத்தின் கீழே நின்றனள். அங்குவந்த மலைவேடுவரிற் சிலர் இவள் மேனி கண்டு வியப்பெய்தி நெருங்கி நின்று, "மலைவேங்கையின் குளிர் நிழலிலே அலைநீர் சொரியும் அணங்குபோல நிலைகுலையக் கலங்கி நிற்கும் குலக்கொடியே! யார் நீ?" என்று கேட்க, அதற்கவள் "மணமதுரையோடு அரசு கேடுறக் கணவனை அங்கிழந்து வந்த கடு வினையாட்டியேன் யான்; கண்ணகி என்பதென் பேர்' என்றாள். இது கேட்ட வேடுவர் கணம் நடுக்கமெய்தி, அவளை வணங்கி நின்ற போது வானத்தில் நின்றும் விமானமொன் றிறங்கி வந்தது. அதிலிருந்த வானவர் கண்ணகிக்குப் பூமாரி சொரிந்து, அவள் கணவன் கோவலனை அவளுக்குக் காட்டி அவளையும் அவ்விமானத்திலே உடனழைத்துச் செல்வாராயினர். இவ்வியத்தகு காட்சியைக் கண்டு களிப்பெய்திய வேடுவர், 'இங்கு வந்த கற்புடைமாதராள் விற்படை வேடுவரின் நற்குலத் தெய்வமாவாள்; ஆதலின், இவள் பொருட்டுக் குரவையாடுவோம்' என்று கூறி ஒருங்கு திரண்டு குரவையாடிப் பாடல்கள்பாடி மகிழ்ந்து நின்றார்கள்.

இஃதிங்ஙனமிருக்க, நம் குட்டுவர் பெருமான் வஞ்சியிலுள்ள 'இலவந்திகை வெள்ளிமாட' மென்னும் மாளிகையில்

தன்னருந்தம்பி இளங்கோவுடனும், தேவி வேண்மாளுடனும் மகிழ்ந்திருக்க, மஞ்சுசூழ் சோலைசேர் மலைவளங் கண்டு களிக்க வேண்டும் என எண்ணினான். மறு கணமே பயணத்துக்கு வேண்டிய யாவும் ஆயத்தமாயின. சேனை கடலென ஆரவாரித்தெழுந்தது. முரசங்கள் முழங்கின. தேவமாதருடன் தேவேந்திரன் தன் படைகளைப் பல காவதம் பரப்பி வெள்ளை யானைமேல் வீற்றிருந்து செல்வது போல, தன் பரிவாரங்கள் சூழச்சென்று, திருமாலின் மார்பிடையே விளங்கித் தோன்றும் முத்தாரம் போலக் கரிய பெரிய சோலைகளால் அழகு மிக்க மலையினின்றும் இழிந்தோடும் பெரியாற்றின் மணல் மிக்க எக்கரிலே தங்குவானானான்.

அக்காலையில் வேடுவர் பலர் கூடிவந்து, தம்மலைபடுபொருள்களாய

† "யானைவெண் கோடும், அகிலின் குப்பையும்,
மான்மயிர்க் கவரியும், மதுவின் குடங்களும்,
சந்தனக் குறையும், சிந்துரக் கட்டியும்,
அஞ்சனத் திரளும், அணிஅரி தாரமும்,
ஏல வல்லியும், இருங்கறி வல்லியும்,
கூவை நீறும், கொழுங்கொடிக் கவலையும்,
தெங்கின் பழனும், தேமாங் கனியும்,
பைங்கொடிப் படலையும், பலவின் பழங்களும்,
காயமும், கரும்பும், பூமலி கொடியும்,
கொழுந்தாள் கமுகின் செழுங்குலைத் தாறும்,
பெருங்குலை வாழையின் இருங்கனித் தாறும்,
ஆளியின் அணங்கும், அரியின் குருளையும்,

† சிலப். 25 காட்சிக். 37—54

வாள்வரிப் பறழும், மதகரிக் களபமும்,
குரங்கின் குட்டியும், குடாவடி உளியமும்,
வரையாடு வருடையும், மடமான் மறியும்,
காசறைக் கருவும், மாசறு நகுலமும்,
பீலி மஞ்ஞையும், நாவியின் பிள்ளையும்,
கானக் கோழியும், தேமொழிக் கிள்ளையும் "— என்றின்னோ

ரன்ன பொருட்களை அம்மலைவாணர் தம் தலைமேல் தாங்கிக் கொண்டு, வஞ்சிமாநகரில் மன்னவன் செவ்வி பெறாது திறைகளுடன் வாயிலில் காத்து நிற்கும் பகையரசர் போல, செங்குட்டுவன் திருமுன்னர் வந்து நின்று 'ஏழ்பிறப்படியோம்; வாழ்க நின் கொற்றம்' என்று அவனடி வணங்கி, கானவேங்கையின் கீழே தாம் கண்ட காரிகையின் திறமும், அவள் விண்ணவர் மகிழப் புண்ணிய நாடு புகுந்தமையும் எடுத்துப் புகன்றனர். அப்போது மன்னவனுடனிருந்த தண்டமிழாசானாய சாத்தனார், மதுரையில் கண்ணகிக் குற்றவற்றைத் தாம் கண்ணாரக் கண்டவராதலால் அதனை விளக்கிக் கூறி, கோவலனைக் கொல்வித்தது கொடுமை என உணர்ந்த கூடலர்கோன், கோல்கோடி குடைதாழ்ந்த வகை பொறாது அக்கணமே மயங்கி வீழ்ந்து உயிர் துறந்ததையும், தன்னுயிர் கொண்டு அவனுயிர் தேடுநள் போல் பெருங்கோப் பெண்டும் ஒருங்குடன் மாய்ந்ததையும், கோல்கோடிய கொற்றவன் நாட்டில் தங்காத வேல்விழியாள் குட்டுவ வேந்தன் குடமலை யடைந்ததையும் எடுத்துக் கூறினார்.

இது கேட்ட வேந்தன் வியப்படைந்து "தாம் செம்மையில் நின்றும் தவறிய செய்தி எம் போன்ற

அரசர் செவிகளில் படாமுன்னர் நீங்கிய அவனுயிரானது கோடிய கோலை நிமிர்த்துச் செங்கோலாக்கியது. ஐயோ! அரசருக்குத் துன்பம் ஒன்றோ? இரண்டோ? மாரி வறப்பினும், நாடு வளங்குறையினும், மன்னுயிர் தவறினும் மன்னனே பொறுப்புடையன். ஆதலின், கோக்குடிப் பிறத்தல் கொடுந் துன்பமாகும்" என்று கூறிவிட்டு, "இஃதிருக்கட்டும்; உயிருடன் சென்ற கோப்பெரும் பெண்டினும், செயிருடன் வந்த இச்சேயிழையினும் சிறந்தோள் யாவள்?" என்றுகேட்க, உடனிருந்த தருமபத்தினி வேண்மாள் 'விண்ணவர் நாட்டினில் வேந்தன் தேவி வீற்றிருக்கட்டும்; சித்திர நன்னாட்டிதனிடை வந்த பத்தினிக் கடவுளைப் பரவல் வேண்டும்' என்று கூறினள்.

உடனே மன்னன் அமைச்சரை நோக்க, குறிப்புணர்ந்த அவர் 'பத்தினிக் கடவுளுக்குப் படிமம் சமைக்கக் கல்லைப் பொதிய மலையிலெடுத்துப் பொன்னியிலேனும், கயிலை மலையிலெடுத்துக் கங்கையிலேனும் நீராட்டுதல் சிறந்ததாகும்' என்று கூறினர். அதற்கு மன்னன், 'பொதியத்திலெடுத்துப் பொன்னியில் படுத்தல் நம் முதுகுடிக்கு விழுமிதன்றாதலால், இமையத்திலெடுத்தலே அமையும்; இமவான் அதற்கு இடந்தரானாயின் வஞ்சி சூடி என் வெஞ்சினங் காட்டி மீள்வேன்' என்று வீரமொழி பகர்ந்தான். அப்போது 'வில்லவன் கோதை' என்னும் தளபதி கூறுவான்:"வெற்றி வேந்தே! சிறக்க நின் கொற்றம். கொங்கர்தம் செங்களத்தே ஏனை இரு முடிவேந்தரையும் ஒருபடியாக ஒடுக்கிய சேதி திசையானைகள் செவியிலும் எட்டியுள்ளது. கொங்கணர், கலிங்கர், கொடுங்கருநாடர், கங்கர், பங்களர், கட்டியர், ஆரியர் முதலியோரை

ஆனைக்காலால் தேய்த்த காட்சி என் கண்ணைவிட்டு இன்னும் அகலவில்லை. அன்றியும், அன்னையின் பொருட்டுக் கன்னீராட்டக் கங்கை சென்றபோது திரண்டுவந்த ஆரிய மன்னர் ஆயிரவரை ஒருவனாய்நின்று நீ பொருத கோலம் கடுங்கட் கூற்றமும் கண்விழித்துப் பார்த்ததன்றோ? இத்தகைய நின்னை எதிர்ப்பவர் யாவர்? கல்கொள்ளவே இமயம் செல்வதால் வில் கயல் புலி பொறித்த திருமுக மொன்றை வடதிசை மன்னருக்கு விடுக்க வேண்டும்" என.

அதற்கு, அழும்பில் வேள் என்னும் அமைச்சன் எழுந்து "வெற்றி வேந்தே! பல நாட்டு ஒற்றரும் நம் நாட்டில் நீங்கா துறைகின்றாராதலால், இங்குப் பறை யறைதலே போதுமானது" என்று கூற, அரசனும் அதற்குடன்பட்டான். வஞ்சிமாநகர் வந்தடைந்ததும் புறப்படும் செய்தியைத் தன் நகர வீதிகளில் பறை யறையப் பணித்தான். வள்ளுவர் பட்டத்து யானையை அலங்கரித்துப் பறையேற்றி, "வாழ்க எங்கோ; எம் அரசன் இமயமலையில் சிலையெடுக்கப் புறப்படுகின்றான். ஆதலின், மன்னவர் யாவரும் இடு திறையைக் கொண்டு எதிரே வருக. வாராவிடில் கடலுள் புகுந்தும் மலைமீதேறியும் ஒளித்து வாழுமின். ஆயினும் தப்பமாட்டீர்; எம்மரசன் கடலுக்குள் சென்று கடம்பை வெட்டினவனும், இமய வரையின் சிமையத்தே விற்பொறி பொறித்தவனு மாதலால். இன்னும் கேளீராயின், நும்தோள் துணையாகிய மனைவியரை விட்டுத் துறவு பூண்டு வாழுமின்" என்று பறையறைந்த ஓசை நாடெங்கும் பரவியது.

இதன் பின் சேரன் சிங்காதனத்தில் சிறப்புற வீற்றிருக்க, அமைச்சரும், புரோகிதரும், படைத் தலைவரும், கணிதநூல் வல்லாரும் சூழ்ந்திருந்தனர். அப்போது வேந்தன் அவர்களை நோக்கி, 'வடநாட்டு ஆரிய அரசர்களாகிய கனகனும் விசயனும் தமிழ ராற்றலை இகழ்ந்து கூறினதாக இமயத்தில் நின்றும் இங்கு வந்த இருடியர் கூறக் கேட்டேன். இஃது எம் போன்ற வேந்தர்க்கு இகழ்ச்சி தருவதாகும்; ஆதலின், இமயத்தில் நின்று எடுக்குங் கல்லை இவர் முடித்தலையில் ஏற்றிக் கொணர்வேன். அங்ஙனம் செய்யாமல் வறிதே வருவேனாகில் பகைவரை நடுக்காது குடிகளை நடுக்கும் கொடுங் கோலனாகுக'' என்று நெடுமொழி கூறினான். அப்போது கணிதன் எழுந்து "வடதிசை செல்ல ஏற்ற முழுத்தம் இதுவே; இந்நேரம் புறப்பட்டால் பகைவரெல்லாம் திரண்டு வந்து நின்அடி போற்றிநிற்பர்'' என்று கூற, அப்போதே தன் வாளையும் குடையையும் வடக்கு நோக்கிப் பெயர்த்து வைக்க ஆணை செய்தான். அக்காலையில் அரண்மனை முரசம் முழங்கிற்று; வீரர் ஆரவாரித்தனர். படைவீரர்களும், ஐம்பெருங்குழுவும், எண்பேராயமும், எனை வினைஞர்களுங் கூடிக் கொற்ற வாளையும் வெண்குடையையும் யானை மீதேற்றிப் புறநிலைக் கோட்டத்துப் பெயர்த்து வைத்து அரசவை அடைந்தனர்.

அன்று அரசன், பெரும்படைத் தலைவருக்குச் சோறளித்துத் தன் மணிமுடியில் வஞ்சி சூடினான். பின் தன் வழிபடு கடவுளாய சிவபெருமான் திருவடி வணங்கி அவனடியைத் தன் முடிக்கணிந்து யானை மீதேறினான்.

அப்போது ஆடகமாடமென்னும் அனந்தபுரத்தே சேடன் மேல் துயிலும் திருமாலின் சேடம் கொண்டு சிலர் வந்து ஏந்த அதனைப்பெற்று மார்பிலணிந்தான். வஞ்சி சூடிய வஞ்சி வேந்தன் வடதிசை நோக்கிச் செல்லும் போது வஞ்சியர் பலரின் வாழ்த்தொலிகளும், பலவகை இயங்களின் இன்னொலிகளும், போர்வீரர்களின் ஆர்ப்பரிப்பும் ஒருங்கு கூடிக் கருங்கடலெனப் பெருமுழக்கம் செய்தன. இவ்வாறு புறப்பட்ட சேரன் வஞ்சியை நீங்கி நீலகிரியை அடைந்து அங்கோரிடத்தில் தங்கினான்.

அவ்வேளையில் மின்னொளிபோல முனிவர் சிலர் மன்னவனெதிரே தோன்றி, "சிவனருளால் தோன்றிய சேரனே; இமயம் நோக்கிச் செல்லுகின்றாய் நீ. அம்மலையில் அருமறை அந்தணர் வாழ்கின்றார்கள். அவர்களைக் காத்தல் நின் கடனாகும்" என்று கூறி வாழ்த்திச் சென்றனர். அப்பால் கொங்கணக் கூத்தரும் கொடுங்கருநாடரும் ஆடல் மகளிருடனும் பாடல் மகளிருடனும் ஆடிப்பாடிவர, அவர்களுக்குப் பரிசில் அளித்து இனிதிருந்தான்.

பின்னர், நாடகமகளிர் ஐம்பத்திருவரோடும், இசை வல்லார் இருநூற்றெண்மரோடும், பரிகாசகர் பலருடனும், நெடுந்தேர் நூறுடனும், கைந்நீள் யானை ஐந்நூறுடனும், பரிகளோர் பதினாயிரத்துடனும், சரக்குகளேற்றிய சகடங்கள் பன்னூறாயிரத்துடனும் சஞ்சயன் என்னும் தூதுவர் தலைவன் தோன்றி "அரசே! உன்னுடன் வேற்றுமையின்றிக் கலந்த நூற்றுவர்கன்னர் ஓர் செய்தி கூறியனுப்பினர். நீ வடதிசைச் செல்வது கற்கொண்டு வரவேயானால், இதன்பொருட்டு நீ வருந்தவேண்டா.

நின் நண்பராகிய கன்னர் தாமே கற்கோள் செய்து, கங்கையில் நீராட்டி நின் நாட்டிற் சேர்ப்பர்" என்றான். இதுகேட்ட அரசன் "சஞ்சயனே! வடநாட்டுக் கனகனும் விசயனும் வேந்தர் பலர் ஒருங்குகூடிய கூட்டத்தில் அருந்தமிழாற்றல் அறியாது இகழ்ந்து பிதற்றினராம். அவர் கறுவைக் கருவறுக்கச் செல்கின்றது இச்சேனை. இதனை நூற்றுவர்கன்னர்க்குச் சாற்றிக் கங்கையாறு கடக்க வங்க நிரை சேர்த்துவைக்கச் சொல்வாய்" என்று கூறித் தூதுவனை அனுப்பினான்.

பின் தென்னவனால் அனுப்பப்பட்டுத் தூதுவர் கொணர்ந்த பொன், முத்து, சந்தனம் முதலிய திறைப் பொருட்களைச் சேரன் ஏற்றுக் கொண்டு திருமுகம் வரைந்து இலச்சினைப் பொறித்து அனுப்பினான். அப்பால் அங்கு நின்றும் புறப்பட்டு வடதிசை சென்று கங்கைப் பேரியாற்றை வங்கத்தின் வழிக்கடந்து வடகரை சேர்ந்து, கன்னர் உபசரிப்பேற்றுப் பின்னும் சென்று, பகைவர் நாட்டில் பாசறை அடித்தான். அப்பொழுது உத்தரன், விசித்திரன், உருத்திரன், பைரவன், சித்திரன், சிங்கன், தனுத்தரன், சிவேதன் முதலிய வடதிசை மன்னவரெல்லாம் கனக விசயருக்குத் துணையாகத் தமிழராற்றல் காண்போமெனத் திரண்டுவந்தனர். இவ்வாறு வந்த வடபுல மன்னவரோடு தென்றமிழ்ச் சேனை சென்றெதிர் தாக்க,வெயில்கதிர் மறைத்த துகில்கொடிப் பந்தரின் கீழே பெரும் போர் நிகழ்ந்தது. தோளும் தலையும் துணிக்கப் பட்டன. குறையுடற் கவந்தங்கள் நின்று கூத்தாடின. வென்றிவீரர் உடல்கள் குன்றெனக் குவிந்தன. கணங் கொண்ட பேய்கள் பிணங்கண்டாடின. இங்ஙனம் எதிர்த்த

வேந்தரைக் கொன்று குவித்து ஒருபகலுக்குள் வெற்றிக் கொடியுடன் விளங்கினான் நம் வேந்தர்பிரான். சேனைகள் வாகை சூடி ஆரவாரித்தன. தோல்வியுற்ற வேந்தர்கள் சடை, காவியுடை, சாம்பற்பூச்சு முதலியவற்றால் வேடம் மாறிப் பறந்தோடினர். கனகனும் விசயனும் கைதிகளாகக் கைப்பற்றப்பட்டனர். போரும் முடிந்தது.

பகைவரைக் கொன்று குவித்து மறக்கள வேள்வி முடித்த மன்னவன், வில்லவன்கோதையுடன் வீரர் பலரை அனுப்பி இமயத்தினின்றும் கல் கொணர்வித்து கனகவிசயர் முடித்தலையேற்றிக் கங்கை யாற்றில் நீர்ப் படை முடித்தான். பின் ஆறு கடந்து தென்றிசை வந்து ஆரிய மன்னர் அழகுற அமைத்த பாடிவீட்டில் தன் சேனையோடு தங்கினான். எல்லா நலனும் எழிலுற அமைந்த அச்சிங்காரப் பாடியில் சேரன் இருந்து, கடும் போரில் கை கால் சிதைந்தும் விழுப்புண் ஏற்றும் வீரச் செயல் நிகழ்த்திய வீரரையெல்லாம் வரவழைத்து அவர் ஆற்றலும் மறமும் புகழ்ந்துகூறி, ஒவ்வொருவருக்கும் பொன்னாலாகிய வாகைப்பூக்களைத் தன் பிறந்த நாளில் கொடுக்குங் கொடையும் பின்னிடுமாறு கொடுத்துபசரித்தான்.

இங்ஙனம் மன்னவன் மகிழ்ந்திருக்கையில் மாடலன் என்னும் மறையோன் அரசனது திருவோலக்கத்தை யடைந்து "வாழ்க வேந்தே! மாதவிமடந்தை கடற்கரையில் வைத்துப் பாடிய கானல் வரிப்பாட்டு கனகவிசயர் முடித்தலையை நெரித்தது" என்றுகூற, அரசன் "மறையோய்! விளங்கக் கூறுவாய்!" என்று வேண்டினன்.

அதற்கு மாடலன் "இந்திரவிழாவின் கடைநாளில் கடற்கரையில் வைத்துப்பாடிய வரிப்பாட்டினால் கோவலன் மனம் வேறுபட்டு மாதவிமடந்தையை விட்டு நீங்கினான்; குலக்கொடியாய கண்ணகியோடு கூடினான்; மாடமூதூர் மதுரை புகுந்தான்; அங்குப் பாண்டியனால் கொலையுண்டிறந்தான். கண்ணகி நின் நாடு புகுந்து கனக விசயர் முடித்தலையேறினள்" என்று நிகழ்ந்தவற்றை விரித்துரைத்தான். பின் அவனிடம் சோழபாண்டி நாடுகளின் நிலைமைகளைக் கேட்டறிந்து மகிழ்ந்து அம்மறையவனுக்குத் தன்னிறையுள்ள ஐம்பது துலாம் பொன்னைத் தானமாக அளித்தான். அரிய நண்பராய ஆரிய மன்னர் நூற்றுவர்கன்னரையும் அவர் நாடு செல்ல அநுமதி தந்தான். அருந்தமிழாற்றல் அறியாதிகழ்ந்த அரசரிருவரையும் ஏனைத் தமிழ் வேந்தரிருவர்க்கும் காட்டிவர நீலனென்பவனை ஏவினான்.

தன்னாட்டினின்று திரும்பி முப்பத்திரண்டு திங்களாயினதைக் காலக்கணிதனாலுணர்ந்த காவலன், தன்னாடு செல்ல விரும்பினவனாய்க் கடலெனப்பரந்த படைகளெல்லாம் ஆரவாரிக்கவும், அரசமாதேவி அகமகிழ்வடையவும், வலம்புரிச் சங்கங்கள் முழக்கம் செய்யவும், வஞ்சிமாநகர் மக்கள் கார்பெற்ற தோகைபோல் எதிரேற்றுக் களிக்கவும் மாலையையுடைய வெண்கொற்றக் குடை மதியமென விளங்க, யானையெருத்தம் பொலிவு பெற வாகை சூடிய மன்னவன் வஞ்சி மாநகர் வந்தடைந்தனன். இதுகாறும் நாளொப்பனை செய்யாது வாள்கண் துயிலாது மரப்பாவை போன்றிருந்த தன்னின்னுயிர்க் காதலியை மன்னவன் குறுகி மகிழ்ந்திருந்தான்.

நாட்கள் பல சென்றன. ஒருநாள் அரசன், பல்வகைச் சிறப்புக்களுடனும் வரிசைகளுடனும் வேத்தவையில் இனிது வீற்றிருக்கும்போது, நீலன் வந்து "வாழ்க வேந்தே! நின் ஆணையின்படி செம்பியன் நாடு சென்று ஆரிய அரசர் இருவரையும் காட்ட, 'வாளுங் குடையும் போர்க் களத்திலிட்டு, துறவுக் கோலத்தோடு மறைந்தோடி யோரைச் சிறையாகப் பிடித்தல் சிறப்பன்று' என்று கூறினான். அதன்பின் பாண்டியன் வாழும் மதுரை சென்று மன்னரைக் காட்ட, அவன் 'தவக்கோலங் கொண்டு தப்பியோடியோரிடம் சேரன் காட்டிய சீற்றம் புதுமையாயிருக்கின்றது' எனக் கூறினான்" என்றனன்.

இது கேட்ட குட்டுவன் உள்ளத்தே சினம் குதித் தெழுந்தது. அவன் கண்கள் செந்நிறங் கொண்டன. வெகுளி நகை வெளிக்கிளம்பிற்று. இது கண்ட மாடல மறையோன், அவன் மனங் கொள்ளுமாறு நன்மதி புகல்வானாய் 'வெற்றிவேந்தே! சிற்றந்தணிக. இவ்வுலக முழுதும் ஒருதனியே ஆளும் உரிமையை யுடையவனே! நீ நெடுங்கடலுள் புகுந்து கடும்போர் புரிந்து கடம்பை முதலொடும் தடிந்தாய்; வடநாட்டு ஆரிய மன்னரை வணங்கும்படிச் செய்தாய்; கனகவிசயர் தலையில் கல்லு மேற்றினாய். வேந்தர் வேந்தே! உனக்கோ ஐம்பதாண்டுகள் நிறைந்தன. இதுவரை அறக்கள வேள்வி செய்யாது மறக்கள வேள்வியே செய்து வருகின்றாய். செயற்கருஞ் செயல் செய்த நின் முன்னோரெல்லாம் எங்கிருக் கின்றார்கள்? நீரில் குமிழிபோல் நிலையற்றது இவ்வுடல் என்பதை நீ அறியாயோ? மல்லன் மா ஞாலம் வாழ் வோரிடத்துச் செல்வம் நில்லாதென்பதை அருந்

தமிழிகழ்ந்த ஆரிய மன்னரிடத்தே கண்டனை. இளமை நிலையாது என்பதை எடுத்துக் கூறவும் வேண்டுமோ? நரை முதிர்ந்த மேனியை நீயும் பெற்றாய். மக்களாய்ப் பிறந்தோர் மறுமையில் விலங்காய் நிலத்தில் தோன்றவும் நேரும். விலங்குடம்பு கொண்ட உயிர் கலங்கு துன்பம் தரும் நரகராக வேண்டியும் வரும்.

† "ஆடும் கூத்தர்போல் ஆருயிர் ஒருவழிக்
கூடிய கோலத்து ஒருங்குநின் றியலாது
செய்வினை வழித்தாய் உயிர்செலு மென்பது
பொய்யில் காட்சியோர் பொருளுரை ஆதலின்"— வீடு

பெறுவதன் பொருட்டுக் கேள்வி நல்லறிவுடைய அந்தணரைக்கொண்டு வேள்விகள் பல செய்தல்வேண்டும். அதுவும்,

* "நாளைச் செய்குவம் அறனெனின் இன்றே
கேள்வி நல்லுயிர் நீங்கினும் நீங்கும்,
இதுவென வரைந்து வாழுநா ளுணர்ந்தோர்
முதுநீ ருலகின் முழுவது மில்லை"— ஆதலால் இன்றே

செய்தல் வேண்டும். நான் இவ்வளவுங் கூறியது நின்னிடம் பரிசில் பெறும் ஆசையாலன்று; இவ்வுலகில் பிறந்திறக்கும் ஏனைய உயிர்கள் செல்லும் நெறியிலே நீயும் செல்வது என்னால் பொறுக்க முடியவில்லை. பெரியோயே! ஊழியோடு ஊழி நீ உலகங்காத்து ஓங்கி வாழ்வாயாக" என்று கூறி முடித்தான்.

இதனைச் செவியுறக்கேட்ட சேரன் சீற்றம் தணிந்து, வேள்விக்கு வேண்டியவற்றை அமைக்குமாறு அமைச்சருக்கு ஆணை தந்தான். தன்னால் சிறைப்படுத்தப்பட்ட

† சிலப். 28 நடுகற். 165—168. * ஷை. ஷை. 179—182.

கனக விசயரைச் சிறையினின்று மீட்பித்து, சோலையும் பொய்கையும் சூழப்பெற்றதும் சிற்பநூல் வல்லாரால் செய்து முடிக்கப்பட்டதுமான வஞ்சியின் புறத்தேயுள்ள 'வேளாவிக்கோ' மாளிகையில் இருத்தி அவர்க்கு வேண்டு வனவற்றை விருப்புடன் செய்ய சேனைத்தலைவனுய வில்லவன் கோதைக்குப் பணித்தான். அன்றே நாடெங்கு முள்ள சிறைக்கோட்டங்களில் அடைபட்டிருந்தோர் யாவரும் புத்துயிர் பெற்றதுபோல் பெருமகிழ்வுடன் வெளிப்பட்டனர்.

இங்ஙனம் சேரர்பெருமான் ஆணை செய்தபின்,

† "அருந்திற லரசர் முறைசெயி னல்லது
பெரும்பெயர்ப் பெண்டிர்க்குக் கற்புச்சிற வாதெனப்
பண்டையோர் உரைத்த தண்டமிழ் நல்லுரை
பார்தொழு தேத்தும் பத்தினி ஆகலின்
ஆர்புனை சென்னி அரசற் களித்துச்,
செங்கோல் வளைய உயிர்வா ழாமை
தென்புலம் காவல் மன்னவற் களித்து,
வஞ்சினம் வாய்த்தபின் அல்லதை யாவதும்
வெஞ்சினம் விளியார் வேந்தர் என்பதை
வடதிசை மருங்கின் மன்னவர் அறியக்
குடதிசை வாழும் கொற்றவற் களித்து,
மதுரை மூதூர் மாநகர் கேடுறக்
கொதிஅழல் சீற்றம்...........விளைத்து,
நல்நா டணைந்து நளிர்சினை வேங்கைப்
பொன்னணி புதுநிழல் பொருந்திய நங்கை"— யான

கண்ணகிக்கு, அந்தணர் ஆசான் பெருங்கணி கம்மியர் தம்மொடும் சென்று சிற்பநூல் வல்லார் தெரிந்தாய்ந்து

† சிலப். 28 நடுகற். 207—221

வகுத்த பத்தினிக் கோட்டத்திலமைந்த படிமத்தை விண்ணவர் கோலத்தில் நிறுத்திக் காட்டிக் கலனணிந்து பூப்பலி (அருச்சனை) செய்து, காப்பாகக் கடைவாயிலிலே திக்கில் தேவதைகளை நிறுத்தி, வேள்வியும் விழாவும் நாள்தோறும் வகுத்து, மங்கல விழவினை மாண்புற நடத்தினான்.

இவ்வாறு குட்டுவ வேந்தன் பத்தினித் தெய்வத்துக்குப் படிவமமைத்து வழிபடும் பேறு பெற்றதுமன்றி, அத்தெய்வக் காட்சியும், தேவ வாழ்த்தும் சிறப்புறப் பெற்றான். இதனை, மறுநாள் கண்ணகிக் கோட்டத்தின் முன்னே ஆவேசமுற்ற பெண்ணொருத்தி அவனை நோக்கி,

> "ஆனே றூர்ந்தோன் அருளிற் றோன்றி
> மாநிலம் விளக்கிய மன்னவன் ஆதலின்
> செய்தவப் பயன்களும் சிறந்தோர் படிவமும்
> கையகத் தனபோல் கண்டனை யன்றே
> ஊழிதோ றூழி உலகங் காத்து
> நீடுவா ழியரோ நெடுந்தகை"— என்று கூறுவதால்

அறியலாம். தான் எண்ணிய கருமத்தை மிக வெற்றிகரமாக முடித்துப் பெரும் பயன்பெற்ற நம் அருங்குண மன்னன் எஞ்சிய நாளினால் செல்லும் தேயத்துக்கு உறுதுணை நாடக் கருத்துக் கொண்டவனாய்ப் பல்வகை அறங்களும் புரிந்து மேலும் ஐந்தாண்டளவும வீற்றிருந்தான். மண்ணுலக இன்பங்களை மாண்புறத் துய்த்து ஐம்பத்தையாண்டு இந்நில வுலகிற் றங்கித் தன் புகழை எங்கும் நிலவ விட்டுப் பின் விண்ணோர்க்கு விருந்தினனாயினன் நம் வேந்தர்பெருமான்.

---

# 4. இளங்கோவடிகள்.

தீந்தமிழ்க் கவிஞர் தேசிகவிநாயகம் பிள்ளையவர்கள்

"தேனிலே ஊறிய செந்தமிழின்—சுவை
தேரும் சிலப்பதி காரமதை
ஊனிலே எம்முயிர் உள்ளளவும்—நிதம்
ஓதி உணர்ந்தின் புறுவோமே"–என்றனர்கள்.

"..................................நெஞ்சை
அள்ளும் சிலப்பதி காரமென் றோர்மணி
ஆரம் படைத்த தமிழ்நாடு"— என்றார் பாரதியார்.

தமிழ்நாட்டின் பெருமைதான் என்னே! தமிழணங்குக்கு ஓர் புலவர் நந்தா ஒளியுடைச் சிந்தாமணியினை அணிந்தார். இன்னொருவர் அணிகொள் முத்த மணிமேகலை புனைந்தார். வேறொருவர் விளைந்த அழகுடை வளையொன்று சூட்டினார். மற்றுமொருவர் எண்டலமும் ஒளிரும் குண்டல மீந்தார். நம் குட்டுவ பிரானுக்கிளையோனாய இளங்கோ வேந்தனோ விலைமதிப் பில்லாச் சிலப்பதிகாரத்தைச் சீர்பெறச் சமைத்து அணிவித்தார்.

பாரதியார், ஐம்பெருங் காப்பியங்களுள் ஏனையவற்றை விட்டுச் சிலப்பதிகாரத்தை மட்டும் புகழ்வதற்குக் காரணம், இதற்கென அமைந்த சிறப்பியல்புகள் பலவாதலால் என்க. சிலப்பதிகாரமும் மணிமேகலையும் ஒழிந்தவை, கதை நிகழ்ச்சிகளுக்கு வெகு காலம் பிற்பட்டுப் புலவர்களால் பாடப்பட்டவை. ஆகவே, அவற்றில் பொய்யுரையும் புனைந்துரையும் மிகுந்து காணப்படும். சிலப்பதிகாரமோ அத்தன்மை யுடையதன்று.

ஆசிரியர் காலமே கதை நிகழ்ந்த காலமாதலால் அவர் நேரில் கண்டவற்றையும், கண்டவர் சொல்லக் கேட்டவற்றையும் கொண்டு கனிவுறப் பாடப்பட்டது. அன்றியும், சோழ பாண்டி சேர மென்னும் முத்தமிழ் நாட்டிலும் முறையே நிகழ்ந்த வரலாற்றோடு அந்நாட்டியல்புகளையும், அவ்வேந்தர் பெருமைகளையும் ஏற்றுத் தாழ்த்தாது எடுத்தியம்பும் தனிச் சிறப்பும் வாய்ந்தது. அரிய முத்துக்கள் போன்ற நீதிகளை உள்ளடக்கிய பேழையாகத் திகழ்வது. சொற்சுவையும் பொருட்சுவையும் பொலிந்து காணப்படுவது. இவற்றாலும் இன்னும் பல்வகைக் காரணங்களாலும் இது கற்றோராலும் மற்றோராலும் போற்றிப் புகழ்ந்து கொண்டாடப் படுகின்றது.

இத்தகைய சிறந்த காவிய ஆசிரியரின் வரலாறும் ஓரளவே தான் அறியப்படுகின்றது. இவர் இளங்கோ வடிகள் என்னும் பெயரால் அழைக்கப் படுகின்றாரென்றாலும், இஃதே இவருடைய இயற்பெயர் என்று கூறுவதற்கில்லை. இவர் செங்குட்டுவனுக்கு இளையவராதலால் இளைய வேந்தன் என்னும் பொருளில் 'இளங்கோ' என்று அழைக்கப்பட்டார். பின், அச்சிறு பருவத்திலேயே தன் தமையன் பொருட்டுத் துறவுக்கோலம் பூண்டமையால் 'இளங் கோவடிகள்' என்னும் சிறப்புப் பெயர் பெற்றார். இதுவே பின்னால் இவரது இயற் பெயர் போல வழங்கலாயிற்று. இவர் துறவுக்கோலம் பூண்ட வரலாற்றைச் சிலப்பதிகாரத்தின் இறுதியில் ஆவேசமுற்ற தேவந்தி கூறியதாக இவரே கூறுகின்றார்.

தென் குமரி முதல் வட இமயம்வரை தன் ஆணையைச் செலுத்தி, இமயத்தே விற்பொறி பொறித்து வெற்றியுடனாண்ட சேர நாட்டிறையாகிய நெடுஞ்சேரலாதனுக்குச் சோழன் மணக்கிள்ளி ஈன்ற மக்களிருவர். அவருள் மூத்தவனாய செங்குட்டுவனைப்பற்றி முன்னர்க் கூறினோம். இளையனாய இளங்கோ இளமையிலேயே கல்வி கேள்விகளில் சிறந்து விளங்கினார். கடவுள்பத்தி, சகோதரவாஞ்சை, அன்பு, அருள், ஈகை, உண்மை முதலிய உத்தம குணங்கள் அவருள்ளத்தே மெத்தவுங் குடிகொண்டிருந்தன. அவர் இளமையிலேயே ஓர் உயரிய புருடராகச் சிறந்து விளங்கினார்.

ஒருநாள், அரசன் தன் அத்தாணிமண்டபத்தே அமைச்சர் முதலிய துணைவரும் ஏனைப்புலவர் பெருமக்களும் சூழ வீற்றிருந்தான். குட்டுவனும் இளங்கோவும் அவனடிக்கீழ் அகமகிழ்வுடன் அமர்ந்திருந்தனர். அப்போது அச்சபைக்கு நிமித்திகன் ஒருவன் வந்தான். அவன், முகக்குறிப்பால் வரும் பொருளை வகுத்துரைக்கும் வன்மை வாய்ந்தவன். வந்தவன், அரசனை வணங்கிவிட்டு, அவன் மருங்கே யிருந்த மக்களிருவரையும் அடிமுதல் முடிவரை நெடிது நோக்கினான். பின் அரசனை நோக்கி, ‘வெற்றிவேந்தே! இவ்விரு மைந்தருள் இளையவனாகிய இவனே மணிமுடி தரித்து அரசாளுவதற்குரிய ஊழுடையன்’ என்றான். நேர்நின்று வெடுக்கெனக் கூறிய இச்சொல் செவியிற் பட்டதும், செங்குட்டுவன் மனம் புண்பட்டது; முகம் இருண்டது; கண்கள் இடுங்கின; மெய் நடுங்கியது. இதனை நொடியிற் கண்டுணர்ந்தார்

இளங்கோ. சேரலனை உற்று நோக்கினார். அவன் இரு மைந்தரையும் இமை கொட்டாமல் மாறி மாறிப் பார்த்த வண்ணமிருந்தான். பின் ஒரு நிமிடமும் தாழ்க்காது சடக்கென எழுந்து நின்று நிமித்திகனை நோக்கி "உலகியல் கல்லா நிமித்திகரே! அருங் குணங்களெல்லாம் ஒருங் கமையப்பெற்ற என் அண்ணன் இருக்க, யான் அரசனாவேன் என்றீரே! இஃதென்ன முறை? மூத்தோனிருக்க இளையவனாளுதல் உலகிலெங்கேனும் வழக்க முண்டோ? உலகி லில்லா நீதியை எங்கே கற்றீர்? அரசவை என்றறியாது ஏறுமாறாகப் பிதற்றலானீர். உமது சோதிடம் இப்போதே பொய்த்திடச் செய்கின்றேன்; இதோ பாரும்" என்று சினந்து கூறினார்.

பின் அவையினரை நோக்கி, "ஐயன்மீர்! உலகிலில்லா நெறியைக் கூறி எனக்கும் என் அண்ணனுக்கும் மனக் கசப்பை உண்டுபண்ணினார் இம் மாயச்சோதிடர். எல்லா வகையினாலும் அரசாளும் தகுதியுடையவர் என் தமையனே என்பதற்கு ஐயமுண்டோ? ஆதலின், அவராளுதலே முறைமையாகும். நான் இவ்வரசாட்சியை ஒரு சிறிதும் விரும்பவில்லை. இனி என்றும் விரும்பப் போவதுமில்லை. இது முக்காலு முண்மை. இதற்காக நான் பிரதிக்கினை ஒன்று செய்து கொள்ளுகின்றேன், என்றும் மணம் புரிவதில்லை யென்று. மணம் புரிந்தவனன்றோ ஆளும் உரிமையை அடையத் தகுந்தவன்? அரசாட்சியை மாத்திரம் வெறுத்துக் கொண்டு மணம் புரிந்து வாழக் கூடாதோ என்று நீங்கள் கேட்கலாம். அங்ஙனம் செய்வேனேல் இன்று இல்லாவிடின் என்றேனும் என் மனம் ஆட்சிமுறையை விரும்புதல் கூடும். அஃதின்றேல்

எனக்கு மக்கள் பிறப்பாராஞல் அவரேனும் விரும்புதல் கூடும். ஆகவே, இவற்றிற்கெல்லாம் வழியின்றி இப்போதே துறவுநெறி பூணுகின்றேன்'' என்று மிக்க துணிவுடன் கூறினார்.

இதனைக் கேட்டவர் யாவரும் திடுக்கிட்டுப் போயினர். சோதிடனே நடுநடுங்கிக் குன்றிப்போனன். அரசன் ஒன்றும் சொல்லத் தோன்றாது மௌனமாயிருந்தான். குட்டுவன் நிலையோ கூற வேண்டுவதில்லை. தனக்கே அரசாட்சியை உரிமையாக்கித் தன்பாலுள்ள அன்பால் தம்பி கூறிய நீதி திறம்பாச் சொற்கள் அவனுள்ளத்தை நெகிழச் செய்தன. ஆனல், தன்பொருட்டுத் துறவுநெறி பூண்பதாகக் கூறிய உறுதியுரை அவனல் தாங்கக் கூடா அளவு கொடுந்துயரம் தந்து மனத்தைப் பாகாயுருக்கி ஓடச்செய்தது. ஆகவே, இரண்டு கன்றினுக் கிரங்குமோர் ஆவென நெடிதிருந்தான். பின்னர்த்தேறி "என்னரிய தம்பீ! யாரோ ஓர் சோதிடர் கூறினவற்றை வைத்துக்கொண்டு உன் மனத்தைப் புண் படுத்தியதோடு என்னென்னவோ முடிவுகளும் செய்து கொண்டாய். நீயே அரசுரிமைபெறும் திருப்பொறி யுடையவனுயி ருந்தாலும் நான் அதற்காக வருந்துவேனே? நீ மணிமுடி தரிப்பது நான் ஆளுவதற் கொப்பன்ரே? இதற்காக நான் வருந்துவேனென்று நீ எண்ணவுங் கூடுமோ? தம்பீ! வேண்டாம். உன் பிரதிக்கினையை மாற்றிக்கொள்'' என்று மிக்க கனிவுடன் எடுத்துக்கூறினன் குட்டுவன்.

என்ன கூறியுமென்ன? இட்ட பிரதிக்கினையை மாற்றுபவனே இளங்கோ வேந்தன்? "என் முன்னேனைய

நீயே முடி தரித்தாளத் தகுந்தவன். முற்பிறந்தோனிருக்க முறைமை கெட்டு ஆளுவேனேல் உலகம் என்னை இகழாதோ? அன்றியும் பெரியோர் கூடிய இச்சபையிலே நான் உறுதியுரை கூறிவிட்டேன். இனி என்றும் எக்காரணத்தினாலும் மாற்றப் போவதில்லை. வண்டியிலே பூட்டப்படப் போகும் நிலையிலிருந்த எருதொன்று அந்நிலை மாறி என்றும் வண்டி இழுக்க வேண்டாத பேற்றைப் பெற்றதுபோல பேரானந்த மடைந்தேன். இதனை எவரும் தடுக்க வேண்டாம்'' என்று தன் முடிந்த முடிவைக்கூறி அப்போதே துறவுக்கோலமும் பூண்டு நின்றார். அது முதல் வஞ்சி மாநகரத்தின் கீழ்பா லிருந்த 'குணவாயிற்கோட்டம்' என்னும் இடத்திலிருந்து, சிந்தையைத் தெய்வத் திருவடி வைத்து அந்தமி லின்பம் அவாவினராய் இனிதமர்ந்தார். ஆயினும் உற்ற வேளைகளில் தன் அண்ண னுடனமர்ந்து உறுதிகள் பல கூறி உதவி புரிந்து வருவார்.

இங்ஙனம் இவர் தன் அண்ணனுக்கு உறுதுணையாக இருக்குங் காலத்தேதான் மலைவளங் காண்பதற்கென்று மன்னன் எழுந்தது. அப்போது இளங்கோவும், கோப் பெருந்தேவியும் கூடச் சென்றதும், எல்லோரும் பேரியாற்றங் கரையில் தங்கியதும், மலைவேடுவர் வந்து காணிக்கை வைத்துத் தாம் கண்டவற்றை வியந்து கூறியதும், அதுபோதிருந்த மதுரைக் 'கூலவாணிகன் சாத்தனார்' என்னும் புலவர், தாம் மதுரையில் வைத்து நேரில் கண்டவற்றை விரித்துரைத்ததும் முன்னர்க் கூறப்பட்டன. புலவரும் இளங்கோவும் நெருங்கிய

நண்பினர் என்றும், புலவர் இளங்கோவின் கல்வித் திறத்தைக் கண்டு வியந்து புகழ்ந்து போற்றி வந்தன ரென்றும் தெரிகிறது. புலவர், தாம் கண்டவற்றைக் கூறிய பின்னர் இளங்கோவை நோக்கி 'ஐயனே! இக்கதை முடியுடை வேந்தர் மூவர்க்கு முரியது. ஆதலின், அடிகள் தாமே இதனை நூலாக்கி அருளல் வேண்டும், என்று வேண்டிக்கொண்ட ஒன்றே இதனை விளக்கிக் காட்டு வதாகும். தம்மிடம் கேட்டுக்கொண்ட புலவர் உரையைத் தலைமையாக் கொண்டு அன்றே தொடங்கிச் சின்னாட் களுக்குள் பாடிமுடித்தார் இச்சிலப்பதிகாரமென்னும் செந்தமிழ் நூலை. பாடி முடித்ததும் தம் நண்பரும் புலவர் திலகமுமாய சாத்தனாரிடம் காட்ட, அவர் அதற்கு முன்பே தாம் பாடிமுடித்த மணிமேகலையை அடிகளைக் கேட்பித்தார். மணிமேகலை துறவையும் தாமே பாட வேண்டுமென்றிருந்த அடிகள், அது பாடி முடிக்கப் பட்டதை யுணர்ந்து அதுவே அமையு மென்று வாளா இருந்து விட்டார்.

இவர் தமிழ்ப்பேரறிவும் சிறந்த புலமையும் வாய்ந்த வரென்பதை இவரது சிலப்பதிகாரமே மலையிலக்கென விளக்கிக் காட்டி நிற்கும். இவரது குணப் பெருமை களெல்லாம் அந்நூலை வைத்துக் கொண்டே ஆராயத் தக்கன. இவர் சிந்தை கோடாச் செந்நெறி நிற்கும் பெரும் புலவர். தனது அண்ணனாகிய சேரனையன்றி ஏனை இரு பெருவேந்தரைப் பேசுமிடத்தும் சிறிதும் தாழ்த்தாது உண்மைநிலை பிறழாமல் புகழ்ந்து கூறுதல்போன்ற திறம் எவருக்கும் எளிதில் அமைவதன்று. அன்றியும், தான்

ஆருக சமயியாய் இருந்தும் ஏனைச் சமயத்தெய்வங்களாகிய சிவன், செவ்வேள், திருமால் முதலியோரையும் வெறுத்தலின்றி ஏற்ற முறையில் புகழ்ந்து கூறும் தனிப் பெருங்குணமும் அமையப் பெற்றவராவர் ஆசிரியர். அண்ணனே சிவனையும் திருமாலையும் வணங்கும் தன்மையுடையன். அடிகள் ஆருகசமயி. அவரது நண்பர் சாத்தனார் பௌத்தக் கொள்கையுடையவர். ஆயினும் எவ்வித வேற்றுமையும் இவர்களிடையே காணப்படவில்லை.

ஆசிரியர் நூல் எழுதியதன் நோக்கம், கோவலன் கதையையும், காவலர் மாண்பையும் மட்டிலும் காட்டுவதோ தன் புலமைத் திறத்தை உலகினுக்குப் புலப்படுத்துவதோ அல்ல. துறவறம் பூண்ட தன்னால் இறவா நீதிகள் பல உலகினர்க்கு உணர்த்தப்பட வேண்டுமென்பதே அவர் நெஞ்சிலே விஞ்சிநின்ற ஆசையாகும். இந்நீதிகளைத் தம் நூலில் அங்கங்கே ஏற்ற இடங்களில் மிக அழகாகச் சுட்டிக் காட்டிச் செல்லுகின்றார். அவற்றுள் முக்கியமான இரண்டிடம் மட்டிலும் காட்டுதும். சாத்தனாரிடம் கதை நிகழ்ச்சியைக் கேட்டு மனங் கொள்ளப் பதித்து விட்டு, இக்கதை எவ்வெந் நீதிகளைப் பொதிந்திருக்கிறது என்று ஆராய்கிறார் இளங்கோ. பின்,

* "அரைசியல் பிழைத்தோர்க்கு அறம்கூற் றாவதூஉம்,
உரைசால் பத்தினிக்கு உயர்ந்தோர் ஏத்தலும்,
ஊழ்வினை உருத்துவந்து ஊட்டும் என்பதூஉம்
சூழ்வினைச் சிலம்பு காரண மாகச்

* சிலப். பதிகம் 55—60

சிலப்பதி கார மென்னும் பெயரால்

நாட்டுதும் யாமோர் பாட்டுடைச் செய்யுள்"— என்று அடிகள் கூறினதிலிருந்து நீதிகளைப் பொதிந்து கதை கூறுவதே அவரது முக்கிய நோக்கம் என்பது புலனுகின்றது.

இன்னும், கதையை மிக இனிமையாகக் கூறி வாசகர் மனதைத் தம் வசமாக்கிப் பண்படுத்தி வைத்து ஏற்ற செவ்வி பார்த்து,

† "..................................... இளங்கொடி
தன்திற முரைத்த தகைசால் நன்மொழி
தெரிவுறக் கேட்ட திருத்தகு நல்லீர்!
பரிவும் இடுக்கணும் பாங்குற நீங்குமின்
தெய்வம் தெளிமின் தெளிந்தோர்ப் பேணுமின்
பொய்யுரை அஞ்சுமின் புறஞ்சொற் போற்றுமின்
ஊனூண் துறமின் உயிர்க்கொலை நீங்குமின்
தானம் செய்ம்மின் தவம்பல தாங்குமின்
செய்ந்நன்றி கொல்லன்மின் தீநட் பிகழ்மின்
பொய்க்கரி போகன்மின் பொருள்மொழி நீங்கன்மின்
அறவோர் அவைக்களம் அகலாது அணுகுமின்
பிறவோர் அவைக்களம் பிழைத்துப் பெயர்மின்
பிறர்மனை அஞ்சுமின் பிழையுயிர் ஓம்புமின்
அறமனை காமின் அல்லவை கடிமின்
கள்ளும் களவும் காமமும் பொய்யும்
வெள்ளைக் கோட்டியும் விரகினில் ஒழிமின்
இளமையும் செல்வமும் யாக்கையும் நிலையா
உளநாள் வரையாது ஒல்லுவது ஒழியாது

† சிலப். 30. வரி. 183—202

செல்லும் தேஎத்துக்கு உறுதுணை தேடுமின்
மல்லன்மா ஞாலத்து வாழ்வீர் ஈங்கென்" — என்றுகூறி

என்றும் இறவா நீதிகளை விதைத்து முளைய வைக்கின்ற நயம் மிக விழுமிதன்றோ? ஆதலின், இத்தகைய புலவர் பிரான் பொன்னடி போற்றி, அவர் பொருளுரை கொண்டு தெருளுடையோராய்ச் சிறந்து வாழ்வோமாக.

---

# 5. சேரமான் தகடூரெறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை.

---

இவன் செல்வக் கடுங்கோ வாழியாதனுக்குப் 'பதுமன் தேவி' யிடத்தே பிறந்த செல்வ மகன். வீரமே உருவானவன். அருங் குணங்களெல்லாம் ஒருங்கமையப் பெற்றவன். தமிழறிவு மிக்கவன். புலவரிடம் பெருமதிப் புடையவன். இவனை எதிர்த்த பகைவர் என்றும் எஞ்சியதில்லை. இவன் கோபத்தை எழுப்பியவர்கள், பெரிய கிளைகளிலே கூடுகட்டி மொய்த்திருக்கிற கொடிய குளவிக் கூட்டங்களைக் கலைத்த சிறுவர்களைப்போல் பெருந்துன்பமுறுவார்கள். இவன் காவிரி பரந்த சோணாட்டுப் புகாரையும், கொல்லிமலையையும் உடையவனாயிருந்தான். பூழி நாட்டார்க்குக் கவசம் போன்றிருந்தவன்.

ஐம்பெருங்குழுவும் இவனை அகலாது அணிபெறச் சூழ்ந்திருந்தது. அவருள் புரோகிதனாகிய அந்தணன் கிழப்பருவ முடையவன். நரையும் திரையும் பெற்று நடுங்கும் மேனியை யுடையவன். வெகுகாலம் இல்லறபோகத்தே அரசனது வரிசைக்குள் மூழ்கி இன்பமனுபவித்து வந்தான். செல்லும் தேயத்துக் குறுதுணை நாட எண்ணினான். வாழ்நாள் வழியடைக்கும் கல், தவமே யென்றுணர்ந்தான். வேள்வி செய்ய வேட்கை கொண்டான். செல்வம் வேண்டுமே; செய்வதென்னெனத் திகைத்தான்; மருண்டான். அரசனுணர்ந்தான்

அவன் இச்சையை. போதிய அளவு பொன்னும் வெள்ளியும் பிறவும் கொடுத்து 'வண்மையும், மாண்பும், வளனும், எச்சமும், தெய்வமும் எல்லாம் தவமுடையோர்க்கே ஆதலின், மாதவம் புரிந்து வானுலகடைவீர்' என்றுகூறி, அவனைத் துறந்து போயிருக்கத்தக்க காட்டுக்கு அனுப்பி வைத்தான்.

'அதியமான் நெடுமானஞ்சி' என்பவன் கடையெழு வள்ளல்களில் ஒருவன். மழவரென்னும் வீரர்கள் தலைவன். தகடூரென்னு மூரையுடையவன். ஒருகாலத்தே தன்னோ டெதிர்த்த ஏழரசர்களையும் ஒருசேரவென்று அவர்களது ஏழு இலாஞ்சனைகளையும், நாடுகளையும், உரிமையையும் கொண்டு வீரமன்னனாய் விளங்கி நின்றவன். ஒளவை யாரைக் கொண்டு தன் திவ்விய சவையை அலங்கரித்த வன். அவரைத் தன் அமைச்சன் போலவும், தோழன் போலவும் கொண்டு ஒழுகிவந்தான். தன் உயிரினும் சிறந்தவராகவும், மதித்துவந்தான். ஒருக்கால் மலையி லிருந்து கிடைக்கப் பெற்றதும், உண்டவரை மூப்புப் பிணி சாக்காடு தடுத்து நெடுங்காலம் உயிர்வாழ்விப்பது மான அரிய கருநெல்லிக் கனியொன்றைப் பெற்று, அதைத் தானுண்ணாது ஒளவையார்க்கே கொடுத்து உய்வித்த உத்தம குணவான். தன் பகைவனாய தொண்டைமானென்னும் அரசனிடம் ஒளவைபிராட்டியைத் தூதாக அனுப்பினான். தன் பெருமையை எடுத்து விளக்கித் தன் போர்க் கருவிச் சாலையைத் திறந்து காட்டிய தொண்டைமானிடத்தே "அதிகமான், நீர்த்துறையிலே ஊர்ச் சிறுபிள்ளைகள் கூடி வெள்ளிய தந்தத்தைக் கழுவப்பெற்ற யானையைப் போல எங்களுக்கு

எளியவனும் இனியவனுமாவன்; அருகே அணுவதற்கரிய அதன் மதம்பட்ட நிலைமையைப்போல பகைவர்களுக்கு இன்னாதவன்'' என்றும், 'தினம் எட்டுத்தேரை எளிதில் செய்து முடிக்கும் தச்சனொருவன், ஒருமாதங்கொண்டு கருதி ஆராய்ந்து செய்யப்பட்ட ஒரு தேர்க்காலைப் போன்றவன் எங்கள் தலைவன்' என்றும் புகழப்பட்டவன். அன்றியும் "நின் கருவிச் சாலையிலுள்ள போர்க்கருவி களெல்லாம் மயிற்பீலி அணிந்து மாலை சூட்டிப் பிடி திருத்தி, துருப்பிடியாது நெய்பூசி மிக அழகாக அரண் மனைக்குள் அடுக்கி வைக்கப்பட்டுள்ளன; ஆனால், என் தலைவனது போர்க்கருவிகளோ, பயன்படுத்தப் பட்டுப் பழுதுபட்டமையால் அழகுபடுத்தி வைக்கப்படவில்லை; அவை, பகைவர் உடலைக் கூறுபடுத்தி நுனி மழுங்கிப் போயின; ஆகையினால் அவை செப்பனிடற் பொருட்டு கொல்லனது உலைக்களத்தே கிடக்கின்றன'' என்றும் மிக அழகாக ஔவையாரால் சிறப்பித்துக் கூறப்பட்டவன்.

வெகுநாள் குழந்தையின்றி அரிய தவங்கள் இயற்றிய பின்னர் கருவுற்றாள் அஞ்சியின் மனைவி. பத்துத்திங்களும் நிரம்பலாயிற்று. அக்காலையில் போர்மேற் சென்றிருந் தான் அதிகன். தன்னைச் சினப்படுத்திய வேந்தரைக் கொன்றழித்து வென்றி வீரனாய் வருகின்றான். ஆயினும் கோபமாறவில்லை. அரண்மனைக்குள் நுழைகிறான். ஆண் மகவு பிறந்த சேதியைச் சேடியர் மிக்க ஆனந்தத்தோடு ஓடிச்சென்று கூறுகின்றனர். கேட்ட மன்னன் குழவியைக் கிட்டி நோக்குகின்றான். ஆயினும் பகைவரைச் செறுத்து நோக்கிய கண், தன் சிறுவனை நோக்கியும் சிவப்பு நீங்கவில்லை. இதனை,

† "செறுவர் நோக்கிய கண்தன்
சிறுவனை நோக்கியும் சிவப்பா னவே." என்கின்றார்

ஔவையார்.

இத்தகைய வீரமிக்க அஞ்சியுங்கூட நம் சேர மன்னனிடம் அஞ்சி நின்றான் என்றால் இரும்பொறை மன்னன் வீரம் எடுத்துரைக்குந் தரந்ததோ? யாவரையும் ஒறுத்தோம் என்று முறுக்கேறிய அதிகன் இரும் பொறையிடம் பெரும் பகை காட்டினான். அஞ்சி வீரம் வஞ்சி வேந்தன்பால் வாய்க்குமோ? சேரவேந்தன் தன் சேனைக்கடலைத் திரட்டினான். அடிக்கு வீரக்கழ லணிந்து, முடிக்குப் போந்தைப் பூவொடு பொலந்தார்த் தும்பையும் புகழ்கொளப் புனைந்து, களிநறவும் பெருஞ்சோற்றுணவும் சேனைக் களித்து, வீரர் ஆரவாரிக்கத் துந்துபி முழங்க, முரசமொலிக்க அதியன் தகடூர் நோக்கிப் பயணமானான். இவன் இங்ஙனம் படையெடுத்துச் சென்ற பயணப் பொலிவைச் சிறப்பித்தே * 'தகடூர் யாத்திரை' என்னும் நூல் எழுந்தது.

சென்ற சேரன், அதியனை வென்று அவனுடைய தகடூரைக் கைப்பற்றி வாகை மாலைசூடி வென்றி வீரனாய்த் தன் பெருங்களியானைப் பிடர்த்தலை யேறிச் சேரநாடு வந்தான். பெரு வீரனான அதிகனையும் அதிபராக் கிரமத்தால் வென்ற இவன் வில் வென்றி சொல்லுக்குள் அடங்கும் தன்மையதன்று.

† புறநா. 100

* இந்நூல் முழுவதும் இக்காலையில் கிட்டவில்லை; உரையாசிரியர்களால் மேற்கோள்களாகக் காட்டப்பட்டுள்ள சில பகுதிகள் மட்டுமே உள்ளன.

இரும் பொறை மன்னன் கற்றறிந்த புலவர் பால் கருதரிய மதிப்பு வைத்திருந்தான் என்று முன்னர்க் கூறப்பட்டது. அதற்கு உதாரண மொன்று தருவோம். இவன் காலத்தே 'மோசிகீரனார்' என்னும் புலவர் ஒருவரிருந்தனர். இவர் 'கொண்கானங் கிழார்' என்றுங் கூறப்படுவர். அரசர்களுக்கு உண்மைப் பொருளைச் செவ்விய முறையில் எடுத்துக் கூறும் பண்பு வாய்ந்தவர்.

* "நெல்லு முயிரன்றே நீரு முயிரன்றே
மன்ன னுயிர்த்தே மலர்தலை யுலகம்
அதனால், யானுயி ரென்ப தறிகை
வேல்மிகு தானை வேந்தற்குக் கடனே"

என்னும் சிறந்த செய்யுளைச் செய்த செந்நாப்புலவர். ஒரு நாள் புலவர், பெருஞ்சேர லிரும்பொறையின் அரண்மனைக்குச் சென்றார். அரண்மனைகளில், போர்க்காலங்களிலே முழங்கி மறவருள்ளத்தில் வீரத்தை யெழுப்பி வென்றியை அளிக்கும் போர்முரசங்கள் தூய்மையான ஓரிடத்தை கட்டிலின்மேல் வைத்துக் காக்கப்படுவ துண்டு. சேரன் கோவிலில் வெற்றிமுரசம் சிறப்புடன் வைத்துப் போற்றப்பட்டு வந்தது. போரிலே வெற்றி தரும் அம்முரசம் கருமையான மரத்தினால் செய்யப்பட்டு குற்றமற்ற வாரினால் இறுக்கிக் கட்டப்பட்டது. நீலமணி போலும் நிறம் பொருந்திய மயிற்பீலியினால் ஒழுங்காகத் தொடுத்துக் கத்தரித்து விடப்பட்ட மாலையை, பொன்னாற் செய்யப்பட்ட உழிஞைப் பூவுடனே பக்கங்கள் பொலிவு பெறச் சூட்டப்பட்டது. குருதிப்பலி கொள்ளும் விருப்பத்தையுடையது. அது வைத்தற்கென்று தனியாக

* புறநா. 186.

அமைக்கப்பட்ட முரசு கட்டிலோ தந்தத்தாற் செய்யப் பட்டு மிருந்த அழகுபடுத்தப் பட்டிருந்தது. கட்டிலின் மேல் எண்ணெயினது நுரையை முகந்து எடுத்தாற் போன்ற மெல்லிய ஆடையும் பூக்களும் விரிக்கப்பட்டு மெத்தென்றிருந்தது.

புலவர், அரண்மனைக்குள் சென்றபோது முரசம் அங் கில்லை. அது நீராட்டுவதற்காக வீரர்கள் சூழ இயங்கள் முழங்க வெளியே எடுத்துச் செல்லப்பட்டிருந்தது. உள் நுழைந்த புலவர் சுற்றுமுற்றும் நோக்கினார். பொலி வுடன் விளங்கிய கட்டிலைக் கண்டார். அது கண்ணுக்கு ஆனந்த மளித்தது. மெத்தென்றிருந்த அச்சேக்கையில் பொத்தென் றிருந்தார். பிரம்மானந்தமா யிருந்தது. தன்னை யறியாமலே உடல் சரிந்தது; கண்கள் மூடின; களிப் பெனுங் கடலுள் குளித்தவராய்க் குறட்டை விடலானார்.

புரவலன் வந்தான். முரசு கட்டிலை நோக்கினான். மூடனைப்போல முடங்கிப் படுத்துக்கிடக்கும் ஒருவனைக் கண்டான். 'சிங்காதனத்தில் சுணங்கன் ஏறுவதோ' என்று சினந்தெழுந்தான். போர்முரசுக் கென்று தனியா யமைக் கப்பட்ட இப்பொற்கட்டிலிலே முறை கேடாக ஏறிப் படுத்து இதன் புனிதத் தன்மையைக் கெடுத்துவிட்ட புந்திகெட்ட மடயனை என் உடைவாளுக்கு உணவாக் குவேன் என்று வாளை உருவினான். அருகே நெருங்கி வாளை ஓங்கினான். அடுத்த நிமிடமே புலவருடல் இரு துண்டா யிருக்கவேண்டும்.

நல்ல காலமாக தமிழ்ப் புரவலன் கண்கள் தமிழ்ப் புலவன் முகத்தே பதிந்தன. அதனை இன்னும் சற்று ஊன்றிப் பார்த்தன. முரசுகட்டிலில் முடங்கிக் கிடப்பது தமிழறிவின் பிண்டமெனத் தெரிந்துகொண்டான். மோசிகீரன் என்னும் மூதறிவாளன் என உணர்ந்தான். நஞ்சு அமுதான வாறுபோலத் தன் நெஞ்சிலே குடிகொண்டிருந்த வெஞ்சினமெல்லாம் பாசமாக மாறியது. உறைவாள் உறைக்குள்ளே புகுந்தது. இங்ஙனம் கோபமும் வாளும் ஒளித்துக் கொள்ளவே அன்புவெள்ளம் வெளிப்பட்டுக் கரைபுரண் டோடியது. துயின்றதால் தூய்மை யற்றுவிட்டது என்ற எண்ணம் மாறி அது முன்னிலும் பன்மடங்கு தூய்மையும் பெருமையும் பெற்றுவிட்டது என்னும் எண்ணம் எழுந்தது. புலவர்பெருமான் தன் அரண்மனைக்கு வரப்பெற்றது தான் செய்த நல்வினைப்பயன் எனக் கருதினான். கட்டிலேறித் துயின்றதும் கருதரிய பெரும்பயன் வருதற்குரிய நற்குறியே என நினைந்து உள்ளம் பூரித்தான். மேலும் விஞ்சியெழுந்த ஆதரத்தினால் புலவர் உறக்கம் குறைவுபடாமலிருக்க வேண்டுமே என எண்ணினான். கடகம் செறித்த தன் கைகளில் கவரியை வாங்கினான். வேந்தர்கள் பலரும் போற்றி அடித்தொண்டு செய்யப் பெற்ற சேரர்பிரான் புலவர்க்கு அடித்தொழில் செய்யலானான். கவரியால் புலவர் உடலமும் உள்ளமும் ஒருங்கே குளிரும் வகையில் மெல்லென வீசி நின்றான். சேரர்பிரான் புலவர்பால் வைத்த மதிப்புத்தான் என்னே! என்னே!! வேந்தனது செந்தமிழ்ப் பற்று செப்பும் தரமுடையதோ?

களைதீர உறங்கிக் கண் விழித்தார் கீரர். எதிரே பார்த்தார். ஓங்கிய கையில் ஏதோ ஒன்றுடன் நின்ற வேந்தன் அவர் கண்ணிற் பட்டான். போர் முரசும் வீரர்களும் அவனைச் சூழ்ந்து நிற்பதும் தெரிந்தது. அவ்வளவு தான். திகைத்துத் திக்பிரமை கொண்டார். அவர் குடர் தூக்கி மறிக்கப்பட்டது. சடக்கென எழுந்தார். ஒன்றும் தோன்றாது அப்படியே உட்கார்ந்தார். உடலும் மனமும் ஒருங்கே ஆடலாயின. கண்கள் இருண்டன. சற்று நேரம் சென்றது. அச்சத்தைச் சற்றே விலக்கிப் பின்னும் கூர்ந்து நோக்கினார். மன்னனது உயர்த்திய கையில் ஒளியுடன் விளங்குவது வாளன்று, வெண்சாமரையே என அவர் கண்கள் திட்டமாகக் கூறின. ஆகவே ஒருவாறு மனம் தேறினார். சிறுகச் சிறுக மனம் திடம்படலாயிற்று.

ஒள்ளிய வாளினால் கொன்றொழிக்க வேண்டியதை விட்டுக் கவரியால் வீசிய அவன் கைகளைப் பார்த்தார். அவன் பெருந்தகைமையை நினைந்தார். நினைக்க நினைக்க வியப்பினும் வியப்பே பெருகிவளர்ந்தது. அவன் குணப் பெருமையை எண்ணி எண்ணிப் புளகிதம் கொண்டவராய் "வெற்றி பொருந்திய கொற்றவ! குற்றந் தீர்ந்ததும், குருதிப்பலி வேட்கை யுடையதும், மாலையினால் அழகு செய்யப்பட்டதும், பகைவரை அஞ்சச் செய்வதுமான நின் வீரமுரசம் நீராடி வருமுன் மெல்லிய பூங்கட்டிலிலே, இதனை முரசுகட்டில் என்றறியாது ஏறிப் படுத்த என்னை உன் கோபமடங்க இரு துண்டாக்கி யிருக்கவேண்டும்; அங்ஙனம் செய்யாது உன் வாளின் வாயை மாற்றிய ஒன்றே நீ தமிழ் முழுதும் அறிந்தமைக்குப் போதிய

சான்று; பின்னும் போதாதென்று என்னருகே நெருங்கி நின்று நின் அழகிய கையில் சாமரையைப் பிடித்துக் குளிர வீசினாயே! இச்செய்கையை நான் என்னவென்று கூறுவேன்? வேந்தே! இவ்வுலகம் எங்கும் பரக்கும் தன்மையாக இம்மையில் புகழுடையோர்க் கல்லது ஏனையோர்க்கு மேனிலை யுலகத்தே வாழ்வில்லை என்பதை நீ விளங்க அறிந்த தன்மையாலோ இங்ஙனம் செய்தது? என்னும் பொருளமைய

† குருதி வேட்கை உருகெழு முரசம்
மண்ணி வாரா அளவை எண்ணெய்
நுரைமுகந் தன்ன மென்பூஞ் சேக்கை
அறியாது ஏறிய என்னைத் தெறுவர
இருபால் படுக்கும்நின் வாள்வாய் ஒழித்ததை
அதூஉம் சாலும்நல் தமிழ்முழுது அறிதல்.
அதனொடும் அமையாது அணுக வந்துநின்
மதனுடை முழவுத்தோள் ஓச்சித் தண்ணென
வீசி யோயே, வியலிடம் கமழ
இவண்இசை யுடையோர்க்கு அல்லது அவணது
உயர்நிலை உலகத்து உறையுள் இன்மை
விளங்கக் கேட்ட மாறுகொல்?
வலம்படு குரிசில்!நீ ஈங்கிது செயலே. என்று மிக

அழகாகப் பாடினார். இங்ஙனம் பாடப்பெற்ற இரும்பொறை வேந்தன் இன்னிசை இன்றளவும் உலகத்தே நிலவுகின்றது. இனி என்றும் அழியா தென்பதற்கு ஐயமுமுண்டோ?

---

† புறநா. 50.

இவன் அருங்குணங்களைக் கண்டு வியந்த 'அரிசில் கிழார்' என்னும் புலவர் இவனைச் சிறப்பித்துப் பத்துப் பாடல்கள் பாடி இவனிடமே சமர்ப்பித்தார். தன்னைப் பத்துப் பாட்டுக்களில் சிறப்பித்துப் பாடிய செந்நாப் புலவர்க்கு அரசன் அளித்த பரிசில் என்ன? பத்துப் பாட்டுக்கும் பத்துப்பொன்னா? பதினாயிரம் பொன்னா? அல்ல, அல்ல; இவை ஒன்றும் பத்துப் பாடலுக்கும் ஈடாகவில்லை.

பெரியோனாகிய நம் சேரன் கொடுக்கவேண்டிய பரிசிலின் அளவறியாது கொடைமடம்பட்டவன். ஆகவே, தானும் தன் மனைவியும் அரண்மனைவிட்டு வெளியிறங்கி நின்று, 'அரண்மனையிலுள்ள எல்லாவற்றையும் கொள்க' என்று மேலும் ஒன்பது நூறாயிரம் காணமும் (பொற் காசும்) சிங்காதனமும் கொடுத்தான். ஆனால் புலவரோ அதனைப் பெற்றுக்கொள்பவர்? "வேந்தே! எனக்கிவை வேண்டியதில்லை. நீபுரவலனாய்ச் செங்கோ லோச்ச நான் இரவலனாய் வந்துன்பால் இரந்து நிற்பதே எனக்கு இன்பம் தருவதாகும். ஆதலின் இவற்றை நீயே கொள்க" என்றுகூறி அரசன் வேண்டுகோளால் அவனுக்கு அமைச்சராக வீற்றிருந்தார்.

இவ்வரசர்பெருமான் புகழ் பதிற்றுப்பத்து, புறநானூறு முதலிய நூல்களில் பரக்கக் காணலாம். இவன் பதினேழியாண்டுவரை அரசு வீற்றிருந்து இறுதியில் அந்தமில் பேரின்பத் தழிவில் வீடு அடைந்தான்.

---

# 6. கோச்சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரல் இரும் பொறை.

சேரர் குலத்தின் ஒரு பிரிவினராய 'இரும்பொறை' மரபினர் சேரநன்னாட்டின் ஓர் பகுதியைச் செவ்வனே ஆண்டு வந்தனர். அம்மரபை விளக்கப் பிறந்த மன்னன் 'கோச்சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரல்இரும் பொறை.' 'கோ' என்பது அரச சாதியை விளக்குவதொரு சொல்லாம். 'சேரமான்' என்பது குடிப்பெயரைக் காட்டுவது. 'வேழ நோக்கின் விறல்வெஞ் சேய்' என்று இவன் கூறப் படுவதால், யானையினது கண்களைப் போல இடுங்கிய சிவந்த அழகான கண்களை உடையவன் என அறியலாம். அருளை யும், ஆண்மையையும், அழகையையும் அவை பொழிந்து காட்டுவன. முருகனைப்போன்ற அழகு படைத்த இவன் 'சேய்' என்னும் பொருத்தமான இயற்பெயரைப் பெற்றிருந் தான். இரும்பொறை மரபை விளக்க வந்தவனாதலால் 'மாந்தரஞ்சேரல் இரும்பொறை' என்னும் சிறப்புப் பெயரை யும் பூண்டான். ஆகவே இவன் 'கோச்சேரமான் யானைக் கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை' என்னும் சிறந்த பெரிய பெயரால் விரும்பி அழைக்கப்பட்டான்.

இவன், பேராண்மையும் பேரறிவும் படைத்தவன். கரிய பெரிய கடலின் ஆழம் கண்டறியப்படினும் இவன் அறிவின் ஆழம் அளத்தற்கரிது. இம் மண்ணுலகின் பரப்பை எண்ணி உணரலாம்; இவன் அன்பின் பரப்பு உணராத்தன்மையது. காற்றினால் கண்டறியப்படுகின்ற

திசைகளினெல்லை கண்டறியப்படினும் படலாம்; இவன் கருணையினெல்லை கணிப்பரிதாகும். இவன் நாட்டு வாழ்வார் செங்கதிர்களையுடைய சூரியனது வெம்மையை அறிவர். அன்றிப் பகைவர் தங்களை வளைத்துக் கொள்வதால் உண்டாகின்ற வெப்பத்தையோ, அவர்கள் வந்து ஊர்களைச் சுடுவதால் உண்டாகின்ற தீயையோ அறியார். தான் சென்று பகைவர் ஊர்களைச் சுடுவதால் உளதாகும் வெம்மைபட்டுத் தன் மலர்ந்த மார்பின் மலர்மாலை வாடப் பெற்றிருக்கின்றுைதலால் இரும்பொறை வேந்தன் அத்தீயை நன்கறிந்திருந்தனன். இவன் குடைக்கீழ் வாழ்வார், மழைக்காலத்தில் வானத்தில் காணப்படுகிற பல நிறங்களமைந்த பெரிய இந்திரவில்லை அறிவார்களே யன்றிப் பகைவர் சினந்து வந்து இவன் நாட்டை அழிப்பதற்குக் கோபித்து வளைத்த கொலை வில்லைக் கண்டறியார். எங்கும் மலிந்து நிறைந்து கிடக்கிற நாஞ்சிற் படைகளை அறிவார்களேயன்றி வேறு படைக் கலங்களையும் அறியார். ஆயினும் இத்தகைய மறமன்னனது மண்ணை விரும்பிக் கவர்ந்து உண்டவர்களும் உண்டு. அவர்கள் யாரெனில் கருவுற்று வயாக்கொண்ட பெண்டிர். இவர்கள் சேரநாட்டுப் புகழ்படைத்த மண்ணின் பெருமையைக் கருப்பத்திலிருக்கும் கருவினுக்குக் காண்பிப்பதுபோலச் சில வேளைகளில் கவர்ந்து உண்பரே யன்றிப் பகைவர் என்றும் சேரமண்ணைக் கவர எண்ணர். எதனுல்? தமக்கு நன்மையையும், கேட்டையும் தன் வரவினுலும் போக்கினுலும் தெரிவிக்கின்ற புட்களில் புதுப்புள் வரினும் பழம்புள் செல்லினும் அதனுல் சிறிதும் நடுக்கங் கொள்ள வேண்டாத அவ்வளவு பாதுகாவலான

அரண்களையும், அதன் மேல் பொருத்தப்பெற்ற பல வகைப் பொறிகளையும், அம்மதிலைச் சூழ்ந்து ஆழ்ந்து அகன்ற அகழிகளையும் உடையவனாயிருந்தான். ஆகவே பகைவர் நெஞ்சம் சேரநாட்டை எண்ணவும் அஞ்சும்.

இத்தகைய அரும் புகழமைந்த இரும்பொறை மன்னன் தமிழ்ப்பேரறிவில் தலைநின்றவனாவன். ஐங்குறு நூறு என்பது ஓர் அகப்பொருள் நன்னூல். அது அகப் பொருள் திணைகள் ஐந்தையும் பற்றி ஐந்து புலவர்களால் பாடப்பட்டதாகும். மூன்றடி முதல் ஆறடிவரை உள்ள குறுகிய பாக்கள் நூறு கொண்டது. இதனுள்ளும் சேரர்தம் பெருமை சிறந்து தோன்றுகின்றது. என்னவெனில் நெய்தல் திணை பாடிய 'அம்மூவனார்' என்னும் புலவர் இச்சேர நாட்டில் அவதரித்தவராவர். நிற்க, பரந்து கிடந்த ஐந்திணைப் பாக்களைக் 'கூடலூர் கிழார்' என்னும் புலவர் பெம்மானைக் கொண்டு அடிவரையறைபற்றியும் திணைபற்றியும் தெரிந்தாய்ந்து தொகுப்பித்து, 'ஐங்குறு நூறு' என்னும் பெயரினை நாட்டுவித்தவன் வானைமுட்டிய புகழுடைய யானைக்கட்சேய் இரும்பொறை என்றால் இவனது செந்தமிழ்ப் பற்றும், பொருணூலறிவும் புகலும் தன்மையதாமோ?

இனி, இவன் எத்தகைய வீரன் என விரித்துரைப் பாம். வெற்றி வேந்தருக்குச் சுற்றிலும் பகைவர் தோன்றுவ தியல்பே. அதுபோல இவன் வீரத்திலும் வெற்றியிலும் பொறாமை கொண்டு பகையாய் முளைத்தவன் பாண்டியன் நெடுஞ்செழியன். இவனும் மிகுந்த வீரமும் ஆண்மையும் படைத்தவன். சோழன், திதியன், எழினி, எருமையூரன்,

இருங்கோ வேண்மான், பொருநன் என்னும் அரசர்களை வென்றவன். மறக்கள வேள்வியும், அறக்கள வேள்வியும் செய்து முடித்தவன். இவனை இளையனென்றும், இவன் நாடாளும் தன்மை இழிக்கத்தக்க தென்றும் பழித்துக் கூறினர் சில மன்னவர். 'அங்ஙனம் பழித்துக் கூறிய பகை மன்னரை, அரியபோரிலே அழியும்படித் தாக்கி, அவர் குடையொடு முரசும் கொள்ளாமற் போனால் நான்குடிகளால் தூற்றப்படும் கோலேனாகுக' என்றும், என் நிலப்பரப் பைப்பெரும் புலவர்கள் பாடாதொழிக' என்றும் இவன் வஞ்சினம் கூறியுள்ள நயம், இவனது செய்யுள் யாக்கும் அறிவையும், கருதியது முடிக்கும் வீரத்தன்மையையும், புலவர்பால் வைத்துள்ள பொன்றாப் பெருமதிப்பையும் தெள்ளத்தெளிய விள்ளுவதாயுள்ளது.

இத்தகைய அரசனே நம் இரும் பொறைக்குப் பெரும் பகைவன். ஒருவனது நண்பனை நோக்கி அவன் குணத்தைத் தீர்மானித்தல் கூடும். அதுபோல, ஒருவனது பகைவனைப்பார்த்து அவன் வீரத்தை விளங்க அறிவதும் கூடியதே. பூனையைப் புலி பொருட்படுத்துவ தில்லை யன்றோ? சிங்கம், சிற்றெலியைச் சிறு துரும்பென மதித் தலன்றி ஓர் பொருளாயெண்ணல் இல்லையே. ஆகவே, இரும் பொறையின் ஆண்மை இதினின்றும் இனிது புலனாவதாம்.

இருவருக்கும் பகை நாளுக்கு நாள் வளர்ந்தது. போர் விரும்பிச் சினந்தெழுந்தான் சேரர்பிரான். போரின்றித் தினவு கொண்டிருந்த வீரர்தோள்கள் பூரித்துப் பருத்தன. நால்வகைப்படையும் நானிலம் நெளியப் பரந்தெழுந்து பாண்டிநாடு சென்றது. அங்கோ

ரிடத்தே பாசறை செய்து தங்கினன் நம் சேரலன். அப் பாசறையின் அமைப்புப் பகரொணா அழகுடையது. வலிமை மிக்க இளைய யானைகள் எண்ணிலாதவை கருமலைகள் போல வரிசையாக நின்று அசைந்து ஆடிநின்றன. அவை எப்படிப்பட்டவை என்றால் பெரிய கையையும், தலையெடுத்து நடக்கும் உயர்ந்த நடையையும், அங்ஙனம் நடக்கும் போது ஒன்றோடொன்று மாறுபட்டொலிக்கும் மணிகளையும், நீண்ட கொம்புகளையும், பொன்னால் பிறை வடிவாகச்செய்து அணியப்பெற்ற மத்தகத்தையும், சினம் பொருந்திய பார்வையையும், பரந்த அடிகளையும், பருத்த கழுத்தையும், கலைக்கப்பட்ட தேனீக்கள் ஆரவாரித்து மொய்க்கும் மலைபோல வண்டுகள் ஒலிக்கின்ற மணம் வீசும் மத நீரையும் உடைய உத்தம இலக்கணம் அமைந்த உயரிய களிறுகள். அவற்றின் பக்கத்தே வெண்ணிற கிரணங்களையுடைய திங்களைப் போன்ற வெண்கொற்றக் குடையின் நிழலிலே, தங்களிடத்து வாளில்லாதவர் அந்தக் குடையே தங்களுக்குக் காவலாக உறங்கினர். அங்கங்கே அமைக்கப்பட்ட பாடி வீடுகள் மெல்லிய கரும்புகளால் வரிச்சுகள் வைக்கப்பட்டு, செந்நெற் கதிர்களால் கூரை வேயப்பட்டவை. அவை திருவிழா நடத்தப்படும் இடம் போல வேறு வேறாய் நின்று பொலிவு பெற்று விளங்கின. வள்ளைப் பாட்டுக்கள் பாடி நெல்குற்றுகின்ற உலக்கை யொலியோடு வேறு பலவகை ஓசைகளும் மிகுந்து தோன்றின. வீரர்கள் மகிழ்ச்சியோடு கைகோர்த்துக் குரவைக் கூத்தாடினர். இவ்வொலிகளெல்லாம் ஒன்று கூடிக் கடலொலிபோல் மிகுந்து தோன்றிப் பகைவரை அஞ்சும்படிச் செய்தன.

குறித்த நாளில் போரும் தொடங்கியது. தலையாலங் கானம் என்னுமிடத்தே இருபெருஞ் சேனையும் எதிர்த்து நின்றன. அது கடலோடு கடல் கைகலப்பது போன்றிருந்தது. பல நாள் பெரும் போர் நடந்தும், குருதி ஆறுகள் ஓடியும், பிண மலைகள் குவிந்தும் எவர்க்கும் வெற்றி தோல்வி இல்லை. இருதரப்புச் சேனையும் ஒரு தரமாகப் பொருது நின்றன. நாட்கள் பலவும் கழிந்தன. செழியன் சேனைகள் தேயலாயின. இதனால் கடுங் கோபங் கொண்டான் நெடுஞ்செழியன். நேர் நின்று சேரனை வெல்ல முடியாதெனக் கண்டு, சூழ்ச்சியால் அவனைத் தொலைக்க எண்ணினான். அதற்கு ஏற்ற தந்திரமும் ஏதோ இயற்றினான். செழியன், தன்னை அகப்படுத்த வஞ்சனை செய்கிறான் என்பதை வஞ்சி மன்னன் நொடிக்குள் உணர்ந்தான் எனினும் யானையானது தன் வலிமையினாலும், மனச் செருக்கினாலும் தன்னை அகப்படுத்தத் தோண்டின குழி மேல் பாவிய பாவைச் சிறிதும் மதியாது சென்று அக் குழியின் கண்ணே வீழ்ந்தாற்போலத் தன் வலிமையினால் வழுதி இயற்றிய வஞ்சனையை வகைவையாது வீரத்தோடு மேற் சென்றான். ஆனால் அவன் வஞ்சனை பெரிதாகையால் அகப்பட்டுச் சிறைப்பட்டான் சேர மன்னன்.

ஆயினும், அஞ்சினனோ வானவன்? உள்ளம் ஒடுங்கி நடுங்கி விட்டனனோ சேரன்? இல்லை; இல்லை. ஆழ்ந்தகன்ற குழிக்குள்ளே வீழ்ந்து விட்ட கொம்பு முதிர்ந்த கொல்லுங் களிறு உள்ளம் மடிந்து அங்கேயே குந்தியிராமல் முன்னினும் பன்மடங்கு வீரங்கொண்டு அக்குழியைத் தூர்த்துக் கரையேறித் தன் இனம் மகிழச் சென்று சேர்வது போல,

ஒருவராலும் தாங்கமுடியாத அச்சூழ்ச்சியில் வீழ்ந்த சேரன், அதனைத் தன் மனவலியாலும், நுண்மதியாலும் எளிதாகத் தாண்டிச் சிறையினின்றுங் கரையேறித் தம் குடிகளும் சுற்றமும் குதூகலமடையச் சென்று சேர்ந்தான். வழுதி சூழ்ச்சி விழலுக்கிறைத்த நீராயிற்று.

சேரன் சிறைப்படுமுன், அவனாலே வென்றடக்கப் பட்ட அரசர்கள் தங்கள் நாட்டை மீட்க எண்ணாமல் சிறை மீண்டு வரும் இவன் வரவைப்பார்த்து நின்று 'இவன் வென்றுகொண்ட நிலமும், கவர்ந்துசென்ற அணிகல னும் திரும்பக்கிடைக்கக்கூடும் இவன் மனம் நம்பால் இரங்கு மாறு நாம் நடந்தால்' என்று எண்ணி இவனுக்கு ஏவல் செய்யத் தலைப்பட்டனர். இவன் வரவு பார்த்திராது 'இவன் சிறைப்பட்டான், நம் நாடு உறப்பெற்றோம்' என்றெண்ணித் தம் நாட்டை எடுத்துக்கொண்ட பகை வேந்தர்கள் 'ஐயோ! இவன் சிங்கம்போல் வலை கிழித்து மீண்டு வந்தான்; நம்மை வெகுண்டு நோக்கினான்; இனிக் காடும், மதிலும் அகழுங்கொண்ட அகன்ற அரண்களை யுடைய நாட்டை இழந்து வாழ நேரும்; ஆகவே இவ னுக்கு இப்போதே ஏவல் செய்யத் தொடங்குவோம்' என்றெண்ணி ஏவற்றொழில் செய்யலாயினர்.

இத்தகைய குன்றாப் புகழ்படைத்த வென்றி வீர னாய நம் சேரமன்னன், வெகுகாலம் சிறப்புடன் ஆண்டு இறுதியில் நாடு நீங்கினவரலாறு யாவரையும் நடுங்கச் செய்வதோடு பெருவியப்பையும் தரவல்லது. இவன் இன்னும் சில நாட்களுக்குள் இறத்தல் கூடுமென்று சில உற்பாதங்களினாலே கண்டறிந்துகூறி, அங்ஙனமே

இவன் இறந்த பின் மிக இரங்கிப் பாடியவர் 'கூடலூர் கிழார்' என்னும் புலவர்பெருமான். இப்பேரறிவாளர் சோதிட நூலிலே வல்லவர் என்பது அவர் கூறுகின்ற நாட்கணித்தால் நன்குவிளங்கும். பங்குனிமாதத்து முதற்பதினைந்து நாளின்கண் மேடராசிபொருந்திய கார்த்திகை நாளில் காரிருளையுடைய பாதிப்பிரவில் பூமியில் தீப்போல் பிரகாசிக்க வானத்திலிருந்து ஒரு நட்சத்திரம் வீழ்ந்ததாம். பங்குனிமாதத்தில் நட்சத்திரம் வீழின் அரசனுக்குப் பீடை என்பது கணித நூற்றுணிபு. இவ்வுண்மை அறிந்த கூடலூர் கிழார், எம்முடைய வேந்தனுய் இரும்பொறை நோயில்லாமல் இருந்தால் நல்லது என இரங்கித் தம் நண்பர்களிடம் கூறினர். அவர் அஞ்சியபடியே ஏழாம்நாள் அரசர்க்கரசனுகிய வஞ்சிவேந்தன் துஞ்சினன் என்று விஞ்சிய துயரால் புலவர் நெஞ்சுபதைக்கப் புலம்புகின்றார். அவர் இவை கூறி இரங்கும்முறை கற்றருள்ளங் கனிவிக்கும் தன்மையது. "ஆர்க்கும் அருவி அருவரைநாட! அளந்து கொடுக்க அறியா ஈகை அண்ணலே! யாம் கலங்கியவாறே நீ ஏழு நாட்களுக்குள் எம்மை விட்டு ஏகிளுய்! நீ வானுலகம் சென்றமையால் வாரால் பிணிக்கப்பட்ட முரசம் அடிப்பாரின்றிக் கண் கிழிந்து உருண்டது. உலகுக்குக் காவலாயிருந்த வெண்கொற்றக்குடை கால்முறிந்து அழிந்தது. காற்றினும் கடுகிச் செல்லும் கதியுடைய கலிமாக்கள் கதியின்றிக் கிடக்கின்றன. இங்ஙனம் இவை அழிய, உன் அவை அழிய, என் மனமழிய உன்னைத் துணையாகக்கொண்ட நின் அன்புடைப் பெண்டிரையும் மறந்துதேவமாதர்கள் விரும்புந்துணையாகச்சென்றனையே"

என்று கண்ணீர்விட்டுக் கசிந்துருகிக் கதறுகின்றார். சேரர் புகழைத் தாங்கிய வேந்தனோ உலக நிலையாமையை உணர்த்தி விண்ணுலகெய்தினான்.

---

# 7. சேரமான் கணைக்கால் இரும்பொறை.

சேர நாட்டரசர் பெருமக்களுள்ளே செந்தமிழ்ப் புலமையும், சீரிய மானமும் கொண்டு சிறந்து நின்றவன் சேரமான் கணைக்கா லிரும்பொறை யாவன். இவனும் இரும் பொறை மரபிலே பிறந்தவன். மிக்க வீரமும் ஆண்மையும் படைத்தவன். பல வேற்றரசரையும் வென்று தன் நாட்டைப் பெரிதாக்கினான். வேந்தரெல்லாம் இவன் முற்றத்திலே திறையுடன் வந்து நின்று செவ்வி நோக்கிக் காத்திருப்பர்.

இத்தகைய வெந்திறல் வேந்தனாகிய இரும்பொறை யைப்பகைத்து நின்றான் சோழ மன்னன் செங்கணான். இம்மன்னன் 'கோச் செங்கட் சோழ நாயனார்' என்று சேக்கிழார் பெருமானாலே பெரிய புராணத்துள் சிறப்பித் துக் கூறப்படுகின்றான். நாயனார் பிறப்புப்பற்றி அந்நூலுள் கூறப்படும் கதை வருமாறு:— "சந்திர தீர்த்தத்தின் பக்கத்தேயுள்ள ஒரு வெண்ணாவல் மரத்தின் கீழே சிவலிங்கமொன்று தோன்றிற்று. அதனைத் தவப்பேறுடைய ஒரு வெள்ளையானை கண்டு, தினந்தோறும் தன் புழைக்கை யினால் நீர் முகந்து ஆட்டி, பூச்சார்த்தி வழிபட்டு வரலாயிற்று. இதனால் அவ்விடம் 'திருவானைக்கா' என்று பெயர் பெற்றது. இதுபோல சிவனருளாலே சிவன் தாள் வணங்கும் பேறு பெற்ற சிலந்தி யொன்று பெரு மான் மீது சருகுதிரா வண்ணம் திருத்கொண்டு புரியக் கருதி, தன் வாய்நூலினாலே மேற்கட்டி செய்தது. மறு

நாள் வழிபட வந்த வெள்ளையானை ஈசன் மேல் சிலந்தி வலையைக்கண்டு, இது தூய்மையற்ற தென்றுணர்ந்து அதனை நீக்கி வழிபட்டுச் சென்றது. மறுநாளும் சிலந்தி மேற்கட்டி கட்ட, பின்னர் வந்த யானை முன்பு போலவே துடைத்து வழிபட்டுப்போனது. அதன் மறுநாளும் இந் நிகழ்ச்சியே காணப்பட்டது. இதுகண்ட சிலந்தி 'எம் பெருமான் மேல் சருகுதிராவண்ணம் கட்டிய மேற் கட்டைக் கலைத்த இப்பொல்லா மதகளிற்றைத் தொலைத்து விடுகிறேன்' என்று வெஞ்சினங் கொண்டு அதன் புழைக்கைக்குள் நுழைந்து கடித்துப் புண்படுத்தியது. அந்நோவு பொறாத யானை கையை நிலத்தே அறைந்து இறந்துபட, உள்ளிருந்த சிலந்தியும் ஒருங்கு உயிர் நீத்தது. இறைவர் வழிபாடு காரணமாக இறந்த இரண்டனுள் வெள்ளையானை சிவகண நாதராகிச் சிவபெருமான் திருவடித்தாமரைகளைச் சேவித்திருந்தது.

சிலந்தியோ, பிள்ளைப் பேறின்றி வருந்தித் தில்லை நாயகனைத் தரிசித்து நின்ற சோழமன்னன் சுவதேவனும் பத்தினி கமலவதியுங் கொண்ட பத்திக்கு மெச்சி இறைவன் இட்ட கட்டளையாலே கமலவதி வயிற்றிற் கருவாயமைந்தது. பத்துத் திங்களும் நிறைந்து கரு வுயிர்க்குங் காலம் கிட்டியபோது காலக் கணிதர் "இக்குழவி இன்னும் ஒரு நாழிகை கழித்துப் பிறப்பின் மூவுலகையும் ஆளும் காவலனாய் விளங்குவன்" என்று கூற, தன்னுயிர் நீத்தேனும் அருமகவைப் பெற்றெடுத்தலே சிறந்த தென்றுணர்ந்த அவ்வீரப் பெண்மணி "அப்படியாயின் என்னைத் தலைகீழாய்க் கட்டித் தூக்குங்கள்" என்று வேண்டிக் கொண்டனள். அங்ஙனமே செய்யப்பட்டது.

குறிப்பிட்ட நேரம் வந்ததைச் சோதிடர் தெரிவிக்கவும் கட்டவிழ்த்து விடப்பட்டுக் கருவுயிர்த்தனள். குழவியைக் கண்ணுறலும், அவளுயிர் சிறுகச் சிறுக விண்ணுறலாயிற்று. பைங்குதலையின் செங்கண்ணைக் கண்ட கருங்குழலாள் "என்கோ செங்கண்ணனோ?" என்று கூறிச் சிவனடி சேர்ந்தாள். தந்தையால் வளர்க்கப் பெற்ற மைந்தன், தன்னிகரில்லா வீரனாய் விளங்கியதோடு முற்பிறப்பின் நற்றவத்தால் சிவபத்தியிற் சிறந்து, சித்தத்தே சிற்றம் பலவனை வைத்துப் பூசித்தலும், நெடுங்கோபுரம் பெருங் கோவில்கள் கட்டி வழிபடலுமாகிய திருப்பணிகளைச் செவ்வனே புரிந்து பொலிந்து விளங்கினான்.

சிவபத்தியைச் செல்வமாக்கொண்ட இச்செங்கணான் எக்காரணத்தாலோ சேரன் சிற்றத்துக்கிலக்கானான். நீறு பூப்பினும் நெருப்பு நெருப்பேயன்றோ? பத்திகொண்டிடில் பகைவரைப் பணிவரோ பார்வேந்தர்? ஆகவே செங்கணானும் சினங்கொழுந்தான். சேரன் வீரம் சொல்லும் தரமோ? இருபெருவேந்தரும் இருநிலமடங்கச் சேனைகளைப்பரப்பி வெஞ்சமரம் விளைத்தார்கள். பொருது வெல்லுதல் அரி தென்றெண்ணிய சோழன் தந்திரத்தால் அவனை வென்றிட எண்ணினான். போரில் சூழ்ச்சி செய்தல் தாழ்ச்சியாகு மென்பதையும் மறந்தான்.

இறுதியில் எங்ஙனமோ சேரசிங்கம் வலைக்குட் பட்டது. சோழன் வீசிய தந்திரவலை சேரலனை வளைத்துக் கொண்டது. அடுத்த நிமிடமே சிங்கம் தளைமாட்டப் பட்டது. மிருகேந்திரன் வேடர்களின் சிறு தந்திரத் தால் கூட்டுக்குள் மாட்டிக் கொள்வதைப்போல இரும் பொறை மன்னன் அருஞ்சிறை வீட்டில் அடைபட்டான்.

என்னசெய்வது? பொங்கி எழுகின்றது சினம்; துடிக்கின்றது உடல்; பறக்கின்றது ஆவி; பற்கள் நெறுநெறெனக் கடிபடுகின்றன; கண்கள் தீப்பொறியைக் கக்குகின்றன. ஆயினும் பயனேதுமில்லை. தன் வீராதிவீரம் வெளிப்படாவாறு மறைத்து நிற்பது வலிய கற்கோட்டை. குடவாயிற் கோட்டம் என்னும் பெரிய சிறை வீடு. உணர்ந்தான் மன்னன். உள்ளம் தளர்ந்தான்; ஆவிசோர்ந்தான்; அகம் புழுங்கினான்; உணர்வொழிந்தான்.

வெகுநேரம் கழித்து உணர்வு பெற்றெழுந்தான். கண்களைச் சுழற்றிச் சுற்றிலும் நோக்கினான். பின்னும் கற்சுவரையே கண்டான். உள்ளமுடைந்து உட்கார்ந்தான். இந்நிலையில் நா வறள ஆரம்பித்தது. நீர்வேட்கை மிகுந்து தோன்றியது. நீரருந்தினால் நலம் என்றெண்ணினான். நேரே நோக்கினான். வாயில் காவலன் நிற்பதைக் கண்டான். அவனிடம் நீர் கேட்க உன்னினான்.

† "ஆவிற்கு நீரென் றிரப்பினும் நாவிற்
கிரவின் இளிவந்த தில்" லையன்றோ?

ஆகவே, அடங்கினான். ஆயினும் உடலில் பற்று வைத்திருக்கு மட்டும் எவ்வளவு நேரம் தான் நீர் வேட்கையைத் தடுக்க முடியும்? வேண்டா வெறுப்புடன் காவலன் அக்காவலோனை நோக்கி 'உண்ணநீர்' என்று சைகை காட்டினான். ஆனால் நீர் கிட்டவில்லை. எப்படிக் கிடைக்கும்? அவன் நெஞ்சில் ஈரமென்பதே கிடையாதே. ஈரமேயில்லாவிட்டால் நீரேது? வெகு நேரத்துக்குப் பின் ஈரம் தோன்றியிருக்க வேண்டும். பின் தான் நீர் சுரந்தது போலும். நீருங் கையுமாய் வந்து

† குறள். 1066.

தோன்றினன் வேந்தன்முன். தான் கேட்டபோது கிட்டாது பின்னர்க் கிடைத்த அருமையற்ற நீரைப் பெய்து தம் வயிற்றுத் தீயைத் தணிக்க மறமன்னன் மனம் இறையளவும் இசையவில்லை.

* "மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னர்
உயிர்நீப்பர் மானம் வரின்" என்னும் பொய்யில்

புலவன் பொருளுரையும் இவன் காரணமாய் எழுந்தது போலும். கிடைத்த நீரை உண்ணுறுய்த் தனக்கடுத்த நிலைமையை எண்ணினன். இந்நிலைக்கு ஆளாக்கியவனை எரித்தழிக்க வல்ல கோபத்தீ உள்ளே மூண்டெழுந்தது. அச்சினம் சற்று நேரத்தில் வெறுப்பாக மாறுதலடைந்து, அவன் சீரிய நாவின் வழிச் செந்தமிழ்ப் புலமை சான்ற செவ்விய பாடலாக வெளிப்பட்டது.

† "குழவி இறப்பினும் ஊன்தடி பிறப்பினும்
ஆளன்று என்று வாளில் தப்பார்
தொடர்ப்படு ஞமலியின் இடர்ப்படுத்து இரீஇய
கேளல் கேளிர் வேளாண் சிறுபதம்
மதுகை இன்றி வயிற்றுத்தீத் தணியத்
தாமிரந்து உண்ணும் அளவை
ஈன்ம ரோஇவ் வுலகத் தானே., என்பது அப்பாடல்.

அஃதாவது, "மன்னர்மரபிலே திங்கள்பத்தும் நிறைந்து பிறக்கும் குழந்தை இறந்தே பிறப்பினும், அன்றி உருவம் அமையாத தசைப்பிண்டமாகப் பிறந்தாலும் இவை ஆளல்லவே என்றெண்ணி வாளா விடாமல் தருப்பையில் கிடத்தி வாளால் வெட்டி அடக்கம் செய்வர்; எதற்

* குறள். 969.

† புறநா. 74.

கென்றால், அரசகுலத்திலே பிறந்தாரெவரும் பகைவரை வென்று விழுப்புண் பட்டுப் போர்க்களத்தே மடிந்து வீரத்துறக்கம் பெறத்தகுந்தவரே யன்றிப் பிணிமூப்புக்களால் இறந்துபடும் இழிநிலை யடையத் தகுந்தவர்களல்லர் என்பதைக் காட்டுதற்கே. ஆனால் நானோ சாக்குழவியும் ஊன் பிண்டமும் என்று சொல்லப்படும் இவற்றின் நிலைமை தானும் பெற்றேனில்லை. பகைவரால் இறந்து படுவதற்குரியவரே அரசராயிருக்க நான் அங்ஙனம் படாதொழிந்தேன். சங்கிலியால் கட்டப்படும் நாயைப்போலக் கட்டித் துன்பம் செய்தனர் இவ்வுறவல்லா உறவினர். இரும்புத்தொடரினாலே விரும்பாத் தொடர்வைத்துக் கொண்டிருக்கின்ற இவர்கள், உபகாரமாகத்தரும் தண்ணீரை இரந்துபெற்று உண்டு வயிற்றுத்தீயைத் தணித்து வாழலாகாது என்னும் மனவலிமை இல்லாமல் இரந்து வாங்குகின்ற என்போன்ற மானமற்றவரை, மன்னரெவரேனும் பெற்றிருப்பாரோ இம்மண்ணகத்தே? எவரும் இரார்'' என்பது இதன் கருத்து. "நான் இரந்து பெற்றதே என் இழிவைக் காட்டிற்று; இனி உண்டு வாழ்வேனேல் பழி என்றும் நீங்காது'' என்று எண்ணி நீரைத்தொடாது உண்ணா நோன்பிருந்து உயிரை ஒழிக்கத் தீர்மானித்தான். என்னே இவன் மானம்! என்னே இவன் வீரம்! இவனன்றோ மானமுடைய 'மறமன்னன்? 'மானமிழந்தபின் வாழாமை முன்னினிது' என்னும் மாண்பொருளுக்கிலக்கிய மாயினான் மன்னவன். ஏன்?

† "மருந்தோமற் றூனோம்பும் வாழ்க்கை? பெருந்தகைமை பீடழிய வந்த விடத்து''.

---

† குறள், 968.

மானமென்னும் அரிய ஆபரணத்தை விற்றுவிட்டு இரத்தல் என்னும் பெரிய இழிவைச் செய்தும் வாழலாம். எங்ஙனமாஞல்? ஈனப்பட்டு ஊட்டிஞலும் இந்த உடம்பானது எக்காலமும் உறுதியோடு நிலைத்து நிற்குமாஞல். ஆஞல், நில்லாதே. என்றும் நிலையாய மானத்தை விற்று நிலையற்ற உடலைப்பேணுவதேன்? ஆகவே, தம் புகழ் நிறுவித் தாம் மாய எண்ணிய சேரர்பெருமான், உண்ணு நோன்பிருந்து உயிர்விடக் கருதியது ஓர் வியப்பன்று.

ஆஞல் மானத்தின் இருப்பிடமாய மன்னனுயிர் எளிதில் நீங்கத்தகுவதோ? சேரனின் இன்னுயிர்த் தோழர் பொய்கையார் என்னும் புலவர் பிரான். சேரநாட்டில் மேல் கடற்கரைக் கண்ணே அமைந்த தொண்டி என்னும் துறைமுகப்பட்டினத்திற் பிறந்தவர். இவர் மன்னன் நிலையை உன்னி உணர்ந்தார். அழுதோ தொழுதோ எங்ஙனமேனும் சேரனை மீட்கத் திருவுளத் தெண்ணிஞர். சோழ வேந்தனை நேர் நின்று புகழ அவர் மனம் இசையவில்லை. ஆகவே இருவரும் நின்று போர் புரிந்த களத்தை வருணிப்பதெனத் தீர்மானித்தார். ஆஞல் சோழனுக்குக் கொடுத்த ஏற்றம் என்ன? ஒவ்வொரு பாடலின் ஈற்றடியிலும் 'சோழன் தன் பகைவரைக் கொன்ற களத்தில்' என்னும் பொருள் வரும்படி அமைத்துப் பாடியதுதான். வருணனைகளெல்லாம் மிக இனியன. 'சோழன், பகைவரை அழித்த களத்திலே, நிலத்தைச் சேர்ந்த யானைகளின்கீழ்க் கிடந்த கண்கிழிந்த முரசுகளின் வழியே குருதிநீர் பாய்ந்தோடுவது பெருமழை பெய்த பின்பு குளக்கரையின் கீழுள்ள மடைகளின் வழி நீரோடுவதைப் போன்றது' எனவும்,

'நிணங்களினால் வழுக்கிக் குருதி வெள்ளத்தால் இழுக்கப் படும் வீரர்கள், இழுத்துச் செல்லப்படுகின்ற யானைக் கொம்புகளைக் கோலாகக் கொண்டு ஊன்றி எழுவர்' எனவும், 'யானைகளின் கைகள் துணிக்கப்பட அவை செங்குருதியை உமிழ்வன, பவளம் நிறைந்த பைகளைத் தலைகீழாகச் சொரிபவற்றைப் போன்றன' எனவும், 'வீரரும் வீரரும் தம்முள் தாக்கும் போது விழுகின்ற செவ்விரத்தம் திருக்கார்த்திகை நாள் வரிசை வரிசையாக விளக்கிடுவதைப் போன்றது,' எனவும் பலவாறு மிக அழகுபடக் களத்திடத்து நிகழ்ந்த செய்தியை நாற்பது வெண்பாக்களில் பாடி ஏட்டிலே பொறித்தார். அதற்குக் களவழி நாற்பதெனப் பெயரினை நாட்டினார். சோழ வேந்தன் எதிரே நீட்டினார்.

பார்த்தான் மன்னன். பெருமிதங்கொண்டான். தன் வீரம் புகழப்பட்டவாற்றை எண்ணி மகிழ்ந்தான். பொய்கை யார் புகழ்ச்சியும், சோழன் மகிழ்ச்சியும் சேரனது தளைகளைத் தறித்து விட்டன. கணைக்காலிரும்பொறை தன்னோடு சேர்ந்து செந்நாப் புலவருடன் சிறந்தினிது வாழ்வானானான்.

---

# 8. சேரமான் பெருமாள் நாயனார்.

இதுகாறும் கூறப்பட்டவர் அனைவரும் வீரத்தால் விளங்கி மானங்காத்த மறமன்னரும், தமிழ்ப்புலமை சான்ற தகைமையோருமாவர். பின்னுளில் அந்தமில் புகழுடைச் செந்தமிழ்ப் புலமையோடு சிவனடிப் பேரன் பில் திளைத்த சிந்தையராயும், திருமால் பத்தியில் ஆழ்ந்த உணர்வினராயும் திகழ்ந்த பெருமக்கள் சிலர். அவருள் சிவபத்தியில் சிறந்து விளங்கியவர் சேரமான் பெருமாள்.

இவர், மேலைக் கடற்கரைக்கண்ணே இருந்ததும், பெரியாறு தன் புறமதிலை அலைத்துச் செல்லப்பட்டதுமான 'மகோதை' என்னும் பெயரையுடைய *கொடுங்கோளூரிலே அரசு வீற்றிருந்த சேரர்குடியில் அவதரித்தவர். 'பெருமாக் கோதையா' ரென்னும் இயற்பெயருடைய இவர், சேரர் குலமும் உலகும் செய்த பெருந் தவத்தால் சைவ சமயம் தழைத்திடப் பிறந்த தவமகன். சுந்தரமூர்த்தி சுவாமிகளாலே புகழ்ந்து துதிக்கப்பெற்ற அறுபான்மும்மை நாயன்மார்களது வரிசையில் அமைந்த ஒருமகன். சேக்கிழார் பெருமானாலே பெரிய புராணத்தில் சிறப்பித்துக் கூறப்பட்ட திருமகன். முன்னைத் தவப்பேறுண்மையினால் இளமை முதலே இவர் ஈசன்பால் நீங்காப் பத்திகொள்ளலானார். நாள்தோறும் திருவஞ்சைக் களத்தப்பனுக்குத் திருமஞ்சனம் கொணர்தலும், திருவலகிடுதலும், திருமெழுக்கிடுதலும், திருநந்தனவனம்வைத்தல், பூப்பறித்தல், மாலைதொடுத்தல், சார்த்தல் முதலியனவுமான திருத்தொண்டுகள் புரிபவராய் அவ்வாலயத்திலேயே தங்கினார்.

* இதுவே இக்காலையில் 'கொடுங்கலூர்' என்று வழங்கப்படுகிறது.

இங்ஙனம் நிகழ்ந்து வருங்காலத்தே செங்கோலோச்சி வந்த சேரவேந்தனாகிய செங்கோற்பொறையன், அழியும் தன்மையதான அரசசெல்வத்தில் அவா நீங்கப்பெற்றவனாய் நித்தியமாகிய முத்தியின்பம் பெற முனைந்து, வனம் நோக்கித் தவம் செய்யச் சென்றனன். ஆகவே, அமைச்சர்கள் அரசுரிமைக் குரியவரான பெருமாக்கோதையாரைக் கொணர எண்ணி, திருவஞ்சைக்களத்தே வந்து நச்சரவம் பூண்ட நாதனடிபோற்றி நிற்கும் நாயனாரைக் கண்டனர். கண்டு அவரை வணங்கிநின்று "பெருந்தகையே! இம்மலை நாட்டை நீரே மணிமுடி சூடி உலையா ஆட்சி செய்திடல் வேண்டும்" என்று விண்ணப்பஞ் செய்தனர். பார்த்தார் பெருமாக்கோதையார். 'இவர்கள் சொல்லோ இன்பமயமான திருத்தொண்டுக்கு இடையூறு புரிவதாயிருக்கின்றது, அரசுபுரிய அருளுண்டானால் அரனடிவணங்கி அறிவேன்' என்று ஆலயத்துள்ளே சென்று எம்பெருமானை வணங்கி விண்ணப்பம் செய்தனர். அப்போது இறைவனருளினாலே குன்றா வழிபாட்டுடன் நின்றே ஆளும் அரசுரிமையும், உயர்திணையும் அஃறிணையுமாகிய எவ்வுயிரும் கூறினவற்றை அறியு மறிவும் (கழறிற்றறிவும்), மிக்க வெற்றியும், குறையாத கொடையும், அரசர்க்குரிய கொடி, படை, வாகனம் முதலியனவும் கைவரப்பெற்று, பையரவணிந்த பெம்மானைப் பணிந்தெழுந்து வெளிவந்து அமைச்சர்களுடைய வேண்டுகோளுக்கு உடன்பட்டார். அதுகேட்ட அமைச்சர்கள் 'திண்டோள் மன்னா! எய்த வந்தனே; கண்டோம் இன்னே செய் தவத்தினை" என்றுகூறிப் பெருங் களிப்புடன் அவரை அரண்மனைக்கு அழைத்துச் சென்றனர்.

கழறிற்றறிவார் என்னும் சிறப்புப்பெயர் பூண்ட சேரர் பெருந்தகையான மாக்கோதையார் நன்மைகள் எல்லாம் ஒருங்கமைந்த ஒரு நன்னாளின் நன் முழுத்தத்தில் பொன்முடி கவித்துக் கண்ணுதல் கோவில் வலம் வந்து முன்னுற வீழ்ந்து பணிந்தெழுந்து, யானைமீதேறி வெண் கொற்றக்குடை நிழற்ற, சாமரை வீச, பரிவாரங்கள் புடைசூழ நகர் வலம் செய்து வரலானார். அப்போது மழையால் நனைந்தவனாய் உவர்ப்பொதி சுமந்து மேனி முழுதும் வெண்ணீறு பூசப்பட்டது போன்ற நிறத்தோடு வரும் வண்ணானைக் கண்டு, அவனை நீறுபூசிய சிவநேசன் என எண்ணி யானையினின் றிறங்கி, பொங்கி யெழுந்த பெருவிருப்பால் விரைந்துசென்று தொழுதுநின்றார். இது கண்ட வண்ணான், அரசர் பிறழ உணர்ந்து நம்மை வணங்கு கிறார்; உண்மை யுணர்ந்தால் யாது நேருமோ என மனங் கலங்கி, அவர் வீழுமுன் அவரடிகளிலே வீழ்ந்து வணங்கி "அடியேனை யார் என்று எண்ணியதோ? அடியேன் அடிவண்ணான்' என்றுகூற, அதற்கு நாயனார் "அடியேன் அடிச்சேரன்; நீர் எக்குலந் துதிப்பினும் யாவரே யாயினும் நும் திருமேனி அழகால் சிவனடியாரை நினைவு படுத்தினீர்; ஆகலால் தொழத்தகுந்தவரே; வருந்தவேண் டாம்; செல்லும்" என்று சொல்லியருளினார்.

இது கண்ட அமைச்சர்முதலாயினோர் அரசருக்குள்ள அடியார் பத்தியைக் கண்டு வியந்து பெரும் பேறு பெற்ற தாய் எண்ணிப் புகழ்ந்து நின்றனர். அரசர் யானைமீதேறி நகர் வலம் செய்து அரண்மனையடைந்து செங்கோல் தாங்கி, வெண்கொற்றக்குடை நிழற்ற, மங்கல வாத்தியம் முழங்க, அரியாசனத்தே இனிதமர்ந்தார். இங்ஙன

மிருந்து நீதிவழுவா நெறிமுறையே ஆணைசெலுத்தி உட்பகை புறப்பகை எனுமிரு பகையுமறுத்து, பகையரசர் திறை கொணர்ந்து தினமும் செலுத்த, செங்கோல் செலுத்தி இனிது அரசு புரிந்து வந்தார். எவ்வித அரச அலுவல்களுக் கிடையிலும் இறைவனடியைக் கணமும் மறவா மனத்தினராயிருந்தார். எந்நாளும் தில்லைச் சிற்றம்பலத்தே ஆனந்தத் தாண்டவம் செய்தருளும் தேவாதி தேவன் திருவடித் தாமரைகளையே பெருந்துணையாக் கொண்டு பூசிப்பாரானார். பூசை முடிவிலே சபா நாயகரும் நாயனாருக்குப் பரிசாகத் தம் சிலம்பொலியைக் கேட்பிப்பது வழக்கம்.

இங்ஙனம் நிகழுங்காலத்தே மதுரையி லெழுந்தருளியிருக்கும் சோமசுந்தரக் கடவுளை நாள்தோறும் இன்னிசைப்பாட்டினால் துதித்து வழிபடும் பக்தனாகிய பாணபத்திரரின் வறுமைநோய் போக்கும் பெருஞ்செல்வம் அளித்தருளத் திருவுளங்கொண்ட பெருமான், ஒருநாள் அவர் கனவிலே தோன்றி "பாணபத்திரா! உன்போல் என்பால் அன்புடையன் சேரமான் பெருமான். உனக்கு வேண்டிய அளவு பொன், மணி, பட்டாடை முதலியன தரும்பொருட்டு ஓலை ஒன்று தருகின்றோம். தாமதியாது சேரநாடு சென்றுவா" என்றுகூறி மறைந்தருளினார். பொழுது புலர்ந்ததும் எழுந்து எம்பிரான் கோவில் வலம் வந்து வணங்கிநின்ற பாணபத்திரரிடம்

"மதிமலி புரிசை மாடக் கூடற்
பதிமிசை நிலவும் பால்நிற வரிச்சிற
கன்னம் பயில்பொழில் ஆல வாயில்
மன்னிய சிவன்யாம் மொழிதரு மாற்றம்

பருவக் கொண்மூப் படியெனப் பாவலர்க்
குரிமையின் உரிமையின் உதவி ஒளிதிகழ்
குருமா மதிபுரை குலவிய குடைக்கீழ்ச்
செருமா உகைக்கும் சேரலன் காண்க!
பண்பால் யாழ்பயில் பாண பத்திரன்
தன்போல் என்பால் அன்பன் தன்பால்
காண்பது கருதிப் போந்தனன்
மாண்பொருள் கொடுத்து வரவிடுப் பதுவே" என்னும்

பாசுரமெழுதிய திருமுகமொன்றைக் கொடுத்தருளினார் சிவபிரானார்.

அதனைப் பெற்று இருகண்களிலும் ஒற்றித் தலைமேற் சுமந்து அப்போதே புறப்பட்டு, மலைநாடு சேர்ந்து கொடுங்கோளூரை யடைந்து, மாளிகை முன்னர் நின்று தம் வரவைச் சேரர்பிரானுக்குத் தெரிவித்தார். கேட்ட சேரன் சிரமேற் கரங்குவித்துப் பேரானந்தக் கடலுள் திளைத்துக் கண்ணீர் வடித்து, மாளிகைப் புறத்தே ஓடோடியும் வந்து, பாணபத்திரரைப் பலமுறை வணங்கி "அடியேனையும் ஓர் பொருளாய் மதித்துத் திருமுகம் தரப்பெற்ற பேறுதான் என்னே! என்னே!! என்று பலவாறு பரவிப் புகழ்ந்து நிற்க, பத்திரரும் அவர் முகம் நோக்கி மகிழ்ந்து திருமுகத்தை நீட்டினார். பத்தரும் அதனைப் பெற்று அத்தனருள் வைத்தவாற்றை வியந்து மகிழ்ந்து விம்மித முற்றுக் கூத்தாடி நாக்குழற, மெய்ம் மயிர் சிலிர்க்க, நீர்சொரிய, நெக்கு நெக்குருகி நெடுநேரம் நின்று நிமலனைத் துதித்துப் பின் முடங்கலைப் பிரித்து

அதனைப் பலமுறை வாசித்து மகிழ்ந்து, தம் அமைச்சர்களைக் கூவி அழைத்து "பண்டாரத்திலுள்ள பொருளத்தனையும் பொதிசெய்து ஆள்மீதேற்றிக் கொணர்க" என்று கட்டளையிட்டனர். அமைச்சர் அங்ஙனமே கொணர்ந்து வந்து பணிந்து நிற்க, அவற்றைப் பாணபத்திரர் முன்னே வைத்துத்"தேவரீர் இப்பெருந் தனங்களையும், நால்வாய் முதலிய நாற்படைகளையும், யானும் இவ்வரசும் கைக்கொண்டருளும்" என்று வேண்டிக் கொள்ள, பாணபத்திரர் பார்த்தார்; பெருவியப்பெய்தினார். சேரனின் பத்திப்பெருக்கையும் சிந்தையின் தூய்மையையுங் கண்டு திகைத்தார். "எல்லாம் கொள்ள எம் பெருமான் ஆணையில்லையே; அரசையும் அரசுறுப்பையும் நீரே கைக்கொண்டருளும்" என்று கூறிப் பணிந்து நின்றார். சேரர்பிரானும் நிருத்தனாணையை மறுத்தற்கஞ்சி உடன்பட்டனர். பாணபத்திரர் யானை பரிகளுள் வேண்டுவன சிலகொண்டு, யானை ஒன்றன்மேல் பொருளனைத்தையும் ஏற்றி விடைகொண்டார். சேரர்பெருமான் ஆரத் தழுவி விடைகொடுத்து, அவர் செல்லும் திசைநோக்கித் தொழுது நின்று, பின் தம் அரண்மனை யடைந்து அரசு வீற்றிருந்தார். பத்திரர் அப்பொருளுடனே பத்திரமாய் மதுரை சேர்ந்தார்.

எவ்வெவ்வுயிர்கள் கழறினவும் எளிதில் அறியும் வன்மை பெற்று, அவ்வவ் உயிர்கள் துன்பமெல்லாம் அறவே துடைத்த காரணத்தால் கழறிற்றறிவார் எனும் பெயரைக் கவின்பெறப் பூண்ட சேரலனார் தன்னுயிர் போல மன்னுயிரைத் தகைமையிற் காத்து வரும் நாளில், வழிபாட்டின் முடிவில் வழக்கப்படி கேட்கும் சிலம்பொலி

ஒரு நாள் கேளாமற்போக, மனமிக மயங்கி "அடியேன் இழைத்த பிழை யாது? அப்பனே! நின்னருள் பெற மாட்டேனுனல் இவ்வுடம்பால் பெறும் பயன் வேறு யாதுதானுள்ளது? ஆதலின் இறத்தலே நன்று" என்று கூறித் தம் உடைவாளை உருவி மார்பிலே நாட்டத் துணிய வும், அக்கணமே இறைவர் தம் திருச்சிலம் பொலியைக் கேட்பித்தருளினார். உடனே நாயனார் உடைவாளை நீக்கிக் கைகுவித்து வணங்கி "ஐயனே! இவ்வருளை முன்செய்யாத தென்னோ" என்று கேட்க, இறைவர் "வன்றொண்டனாகிய சுந்தரன் நம்மை வந்து வணங்கி அன்பால் பதிகம் பாடினான்; அதனைக் கேட்டுவரத் தாமதித்தோம்" என்று கூறிச் சுந்தர மூர்த்தி நாயனாரை நினைப்பித்தார். எம்பிரானுக்கு அடியவர்பால் இருந்த அருள் நலம் தான் என்னே என்று வியந்து, அப்போதே பொன்னார் சடைப் புண்ணியன் நடம்புரியும் புலியூரையும், அவன்பால் வன் றொண்டுபுரிந்த ஆரூரரையும் தரிசித்து மீள விரும்பினார்.

திருவஞ்சைக்களத் திறைவனை இறைஞ்சி வலம் வந்து, நல்ல நாளிலமைந்த நன்முழுத்தத்தே நால்வகைச்சேனையும் பரிசனரும் சூழப் பயணப்பட்டு, தில்லையை யடைந்து சபா நாயகரை வணங்கிச் சிவானந்தக்கடலுள் அமிழ்ந்து திளைப்பாரானார். தில்லையிற் கூத்தனை ஏத்திப் புகழ்வ தென்னாளோ? என்று ஏங்கிக்கிடந்த சேரர்பிரானது உள்ளத்தினின்றும் எம்பெருமானை நேரில் கண்டபோது பொங்கி யெழுந்த பத்திப்பெரு வெள்ளத்திலே ஊறிக் கனிந்த பாசுரங்கள் பல கிளம்பின. பத்திச் சுவை சொட்டச் சொட்ட உள்ளக்கனிவுடன் உருகிப் பாடப் பட்டன அவை. அப் பாசுரங்களடங்கிய பிரபந்தமே

'பொன்வண்ணத் தந்தாதி' என்று புகலப்படுவது. அதினின்றும் முதலும் முடிவுமான இரு பாடல்களைக் கீழே தருதும்.

பொன்வண்ணத் தந்தாதி.

பொன்வண்ண மெவ்வண்ணம் அவ்வண்ணம்
மேனி பொலிந்திலங்கும்
மின்வண்ண மெவ்வண்ணம் அவ்வண்ணம்
வீழ்சடை வெள்ளிக்குன்றம்
தன்வண்ண மெவ்வண்ணம் அவ்வண்ணம்
மால்விடை தன்னைக்கண்ட
என்வண்ண மெவ்வண்ணம் அவ்வண்ண
மாகிய ஈசனுக்கே

"மாயவன் மாமணி கண்டன் வளர்சடை யாற்கடிமை
யாயின தொண்டர் துறக்கம் பெறுவது சொல்லுடைத்தே
காய்சின வானை வளருங் கனக மலையருகே
போயின காக்கையு மன்றே படைத்தது பொன்வண்ணமே"

இங்ஙனம் அந்தாதி பாடிமுடிந்ததும் எம்பிரான் இதற்குப் பரிசாகத் தம் குஞ்சித பாதத்தின் திருச்சிலம் பொலியைக் கேட்பித்தார். சேரமான் பெருமாளும் காலந்தோறும் தவறாது சென்று சபா நாயகரைத் தரிசித்துக்கொண்டு அத்திருப்பதியிலேயே தங்கினர்.

சில நாட்களாயின பின் தம்பிரான் தோழராகிய வன்றொண்டப் பெருமானைக் காணவேண்டுமென்னும் ஆசை துரப்பப் புறப்பட்டு, வழியேயுள்ள பல திருப்பதிகளையும் வணங்கிய வண்ணம் சென்று திருவாரூரை அடைந்தார். சேரர் வருகையை அறிந்த ஆரூரர், மிக்க விருப்பால்

எதிரேற்று வந்து வணங்கப்போக, அவருக்கு முன்னே வணங்கிவிட்ட சேரலனை ஆரூரரும் வணங்க இருவரும் ஒன்றாகக் கலந்து ஆலயத்தினுள்ளே சென்றனர். சென்று வன்மீக நாதரடிகளை வணங்கி நிற்கவும், நாவலூரர் வன்மீக நாதர்மேல் திருவாரூர் மும்மணிக்கோவை என்னும் திவ்வியப் பிரபந்தம் பாடினார்.

பின்னர்ச் சேரர்பெருமானைத் தம் காதற்கிழத்தியாகிய 'பரவையார்' வீட்டுக்கு அழைத்துச் சென்று சகலவித உபசாரனைகளும் செய்வித்து, அங்கேயே தங்கும்படி வேண்டிக் கொண்டார். நாட்கள்பல நடந்தன. கடவுளடியார்களாய இருவரும் இங்ஙனம் அளவளாவி ஆனந்தக் கடலுளாழ்ந்திருக்குங் காலத்தில் வன்றொண்டப் பெருமான், கொன்றை மாலை யுகந்தபிரான் கோவில் கொண்ட தலம் பலவும் சென்று வணங்க விருப்பங் கொள்ள, பாணபத்திரருக்குப் பாசுரம் கொடுத்தருளிய பாம்பணி வேணிப்பிரான் மகிழ்ந்தினிதுறையும் மதுரை மாநகர் செல்லச் சேரர்பிரானும் திருவுள்ளங்கொள்ள, இருவர் கருத்தும் ஒன்றினமையால் அன்றே புறப்படச் சித்தமாயினர். வழிப்பட்டு வழியிலுள்ள திருப்பதிகளெல்லாம் சேவித்துப் பாமாலை சார்த்தி இறுதியில் மதுரைமாநகர் சேர்ந்தனர். சேரநாட்டிறைவனும், சோழநாட்டிலே உதித்த சுந்தரப்பெருமானும் தம்நாடு நோக்கி வருவதனை யறிந்த பாண்டிவேந்தன், பன்னெடுநாள் செய்த தவம் பலித்திடுநாள் இன்றென்றே மகிழ்ச்சி கொண்டு, ஓடோடியும் சென்று அடிகளில் வீழ்ந்து முடியுற வணங்கி அழைத்து வந்து உபசரித்தனன். பாண்டியன் வேண்டுகோளைத் தாண்டமுடியாமையால் பலநாட்களாக அங்கேயே

தங்கினர் இருவரும். பின்னர் மன்னர்பிரானிடம் விடை பெற்றுச் சேரர்பெருந்தகையும், சுந்தரரும் திருவாரூருக்குத் திரும்பினர். அங்குப் பரவை நாய்ச்சியார் வீட்டிலே பல நாள் தங்கி இனிதிருக்குங்கால் தம்நாடு செல்ல விரும்பிய சேரமான்பெருமாள், சுந்தரரையும் தம்மூருக்கு வரும்படிப் பெரிதும் வேண்டிக்கொள்ள, அவர் விருப்பின்படியே புறப்பட்டு, வழியிடையேயுள்ள சோழபாண்டி மலைநாட்டுத் திருப்பதிகள் பலவும் வணங்கி இருவரும் வஞ்சி மூதூர் வந்தடைந்தனர்.

நகரமாந்தரெல்லாரும் மழைவரவு கண்ட மயிலினம் போல மட்டற்ற களிப்பில் ஆழ்ந்து பூமாரி பொழிந்து அவரை வரவேற்றனர். இருவரும் திருவஞ்சைக் களத்திலே கோவில்கொண்டருளும் சிவபிரானைச் சேவிக்க, சுந்தரர் "முடிப்பது கங்கையும் திங்களும்" என்னும் தொடக்கத்தை யுடைய பதிகம் பாடிப் பரவிநின்றார். பின்னர், மக்கள் வாழ்த்தெடுப்ப, இன்னியங்கள் முழங்க, இருவரும் நடந்து அரண்மனை யடைந்தனர். விளங்கும் அரியாசனத்தே ஆரூரரை அமரச்செய்து பொற்கலன்களும் பொன்னுடைகளும் புனைந்து, உரிய வழிபாடுகள் பலவும் புரிந்து, வழிபட்டு நின்றார் சேரர். அப்பால் இருவரும் ஒன்றாயிருந்து அமுதுசெய்து எழுந்து, இறை குணங்களையும் அவனருளையும் பற்றிப்பேசி அளவளாவி இன்பக்கடலுள் மூழ்கிக் களித்தனர். நாட்கள் பல சென்றன.

ஒருநாள், திருவாரூர் மேவிய வன்மீக நாதரைப் பிரிந்தமைக்கு அஞ்சிச் சொன்மாலை தொடுத்தணிந்து, ஆரூர் செல்ல ஆரூரர் விடைகேட்டார். சேரர்பிரான்

பிரிவாற்றுமைக்கு வருந்தி உள்ள முருகித் தாமும் உடன் வருவதாய்க் கூற, சுந்தரர் தேறுதல் பல சாற்றி, நிற்கச் செய்ய, வேறு வகையின்றி மனந்தேறிய சேரர், தம் பண்டாரத்தில் உள்ள பொருளனைத்தையுங் கொணர்வித்து, சுமை ஆட்கள் தலைமேல் ஏற்றி ஆரூரரை அனுப்பி மீண்டு நின்றார். விடைபெற்று மீண்ட சேரமான் பெருமாள், சுந்தரரை மறவாத சிந்தையராய்க் கொடுங்கோளூரிலே வீற்றிருந்து அரசு புரிவாராஞர்.

நெடுநாளாயின. சுந்தரரும் தன்னருமைச் சேரமானைச் சேரஎண்ணி மீண்டும் கொடுங்கோளூர் வந்து இன்பமுடன் தங்குவாராஞர். ஒருநாள் சேரவேந்தன் குளித்து நிற்கும் போது சுந்தரப்பெருமான் திருவஞ்சைக்களத் தண்ணலைத் தொழச்சென்று, கோயில் வலம் வந்து வணங்கி நிற்க, சிவபிரானுல் அழைத்து வருவதற்கென்று கைலாயத்தினின்று அனுப்பப் பெற்ற வெள்ளையானை அங்கு வந்து அவர் அருகே நிற்க, அதன் மீதேறிச் சேரர்பிரானை நினைத்துக்கொண்டே கைலாசம் சென்றார் சுந்தரப் பெருமான். இதனை நினைவால் உணர்ந்த சேரமான்பெருமள், அருகே நின்ற குதிரை யொன்றின் மீதேறிக் கொண்டு திருவஞ்சைக் களத்துக்குப் போய் வெள்ளை யானை அழகு பெற ஆகாயத்தில் செல்லும் சுந்தரமூர்த்தி நாயனுரைக் கண்டு, தாம் ஏறிய பரியின் காதிலே பஞ்சாக்கர மந்திரத்தை யருள, அது ஆகாயத்தே பாய்ந்து ஆனையை யடைந்து வலம் வந்து அதன் முன்னே சென்றது.

சேரர் பெருமானின் படைவீரர், தம் நாயகன் விண்ணிலே செல்வதைக் கண்ணுக் கெட்டுமட்டுங் கண்டு,

பின் காணுராய்த் திடபத்தியினுலே தத்தம் உடைவாட்களால் உடலை அரிந்து வீர யாக்கையைப் பெற்றுப் போய்ச் சேரமான் பெருமாளுக்கும் முற்பட்டு அவரைச் சேவித்துக்கொண்டு சென்றனர். யாவரும் கைலாசம் அடைந்தனர். அழையாது புகுந்தமையால் சேரர்பிரான் மாத்திரம் வாயிலிலே நந்தி யெம்பெருமானுல் தடைப் படுத்தப்பட்டார். உள்ளே புகுந்த சுந்தரர், எம்பெருமானை இறைஞ்சி வலம் செய்து, சேரரும் உடன்வந்த வரலாற்றைச் செப்பினர். உடனே சேரமான் பெருமானை அழைப்பித்து, வந்தவாறு கூறுகென்ன, எம்பிரான் முன்னர் வீழ்ந்து வணங்கித் துதித்து "சுவாமீ! சுந்தர மூர்த்தி நாயனுருடைய திருவடிகளைத் துதித்து அவருக்கு முன் சேவகம் செய்து வந்தேன்" என்றுகூறி 'மாலுமய னும் தேடிக் காணு மலரடிகள்மேல் உலா ஒன்று பாடியுள்ளேன்; அதனைத் தேவரீர் செவிசாய்த்தருளல் வேண்டும்' என்று விண்ணப்பஞ் செய்ய சிவபிரான் "சேரனே! அதனைச் சொல்லு" என்று திருவாய் மலர்ந்தருளினுர். சேரமான் பெருமாணுயனுரும் தாம் பாடிய 'திருகைலாய ஞானவுலா' எனும் திவ்வியப் பிரபந்தத்தைச் சிவபிரான் செவியாரப் பாடிக் கேட்பித்த மாத்திரத்தே, இறைவர் பெருமகிழ்வடைந்து "நம்பால் நீங்காப் பத்திகொண்ட சேரனே! நீ நம் சிவகணங்களுக்கு நாதனுயிரு" என்று திருவாய் மலர்ந்தருள, சேரமான் பெருமாணுயனுர் சிவகண நாதராகிச் சுவாமியைச் சேவித்து நீங்காப் பெரும் பேறு பெற்றிருப்பாராணுர்.

*இவர் பாடியன:—* 1. பொன்வண்ணத் தந்தாதி.
2. திருவாரூர் மும்மணிக்கோவை.
3. திருக்கைலாய ஞானவுலா.

*இம் மூன்றும் பதினோராம் திருமுறையில் சேர்க்கப் பட்டுள்ளன.*

---

# 9. விறன் மிண்ட நாயனார்.

---

† வாரி சொரியும் கதிர்முத்தும்
வயல்மென் கரும்பின் படுமுத்தும்
வேரல் விளையும் குளிர்முத்தும்
வேழ மருப்பின் ஒளிர்முத்தும்
மூரல் முறுவல் வெண்முத்த
நகையார் தெரிந்து முறைகோக்கும்
சேரர் திருநாட் டூர்களின்முன்
சிறந்த மூதூர் செங்குன்றூர்.

இத் திவ்விய நகரமானது தொன்றுதொட்டே யாவராலும் அறியப்பட்டது. பத்தினிக் கடவுளாகிய கண்ணகிக்குச் செங்குட்டுவனால் எடுக்கப்பட்ட கோவிலையுடையது. அன்றியும், வேதியர்கள் குறைவற வாழும் பெருமையினை யுடையது. உலகத்தார்க்கு ஆணி போல்பவராகிய உழவர்கள் பங்கப்பழனத் துழுதொழிலால் பொங்கிப் பெருகும் நெல்வளத்தை எங்கும் மலியச் செய்வதனால் அரசர்தம் செங்கோலும், அந்தணர்தம் அறுதொழிலும், தேவர்களுக்குச் சிறப்பொடு பூசனையும் செவ்வனே நடந்தேறி வந்தன. இவ் வுழவர் தாமும் எத்தகையவரென்றால் உயர்ந்த மறைநூல் சொல்லும் நெறிகளான செப்பம், ஒழுக்கம், வாய்மை, நாண், நகை, ஈகை, இன்சொல், இகழாமை என்னும் எண் குணங்களிலும் இறையளவும் தவறாதொழுகும் தூய நற்குடியில் பிறந்தவராவர்.

---

† பெரிய. 12 விறன்மிண்ட. 2

இத்தகைய சீரிய வேளாண் குடியிலே அக்குடியின் தவப்பயனே? அதன் பெருமையை விளக்க எழுந்த தீபமோ? அன்றிச் சிவபத்தி அடியார் பத்திகளின் வடிவமோ? என்று சொல்லுமாறு தோன்றினார் நம்விறல் மிண்டர். சைவ சமயப் பாற்கடலினின்று 'திருத்தொண்டத் தொகை' என்னும் தெய்வாமுதம் எழுவதற்குக் கடைமத்தாக இருந்தவர்—பத்திச்சுவை கனியும் கற்பகத் தருவாகிய 'திருத்தொண்டர் புராண'த்துக்கு விதை இடுவித்தவர் இப்பெம்மானே. பெற்றோர் செய்த நற்றவப் பேறுண்மையினால் அவர்களுக்கு மகவாய் வந்து வாய்த்தனர்.

தெய்வத் தன்மை வாய்ந்த இக்குழவியைப் பெற்றெடுத்த அவர்களது ஆனந்தம் சொல்லுக்குள் அடங்குவதோ? பெருநிதி பெற்ற வறியவன் போல எல்லையில்லா மகிழ்ச்சியடைந்து போற்றிப் புகழ்ந்து காத்து வளர்ப்பாரானார். வாழை யிளங்குருத்தென வளர்ச்சி பெற்று ஐந்தாம் பருவ மெய்தினார் நம் நாயனார். அக்காலையில் நல்லாசிரியர் ஒருவரிடத்தே தம் மகவை ஒப்படைத்து அகலொளி பெறச் செய்தனர். நாயனாரும் கற்பன கற்று, அக்கல்வியினாலாய பயனை அடையக் கருத்துக் கொண்டனர். கற்றதனால் பயன் முற்றும் உணர்ந்த ஒற்றை நற்றவன் பொற்றாளிணைமலர் போற்றலன்றோ? ஆகவே, அவர் கருத்து முற்றிலும் முழுமுதற் பொருளைத் தேடி அடைவதிலேயே முனைந்து நின்றது. இளமையிலேயே இறைவர் திருவடி மறவா மனமும், மெய்ப்பத்தர்கள்பால் பரிவுறு சிந்தையும் பெற்றுத் திகழலானார். பொன்னார் சடைப் புண்ணியனது சேவடிகளே பிறவிப்பெருக்கடலைக் கடத்தி, முத்திக்கரை சேர்க்க வல்ல புணையா மென்றும்,

அச்சேவடிகளை அடைவதற்குரிய வாயில்கள் மெய்யெல்லாம் வெண்ணீறு சண்ணித்த மேனியராய் விளங்கித் தோன்றும் சிவனடியார்களே யென்றும், அவருக்குத் தொண்டுபுரிந் தொழுகுவதே செய்யக் கடவதான பணியாமென்றும் அவர் கொண்ட கொள்கை நாளுக்கு நாள் வலுப்பெற்று வேரூன்ற லாயிற்று.

தகுந்த பருவத்திலே இவர் நல்லறமாகிய இல்லற வாழ்க்கையிலே புகுந்திருக்க வேண்டும். இதுபற்றிய வரலாறொன்றும் தெரியவில்லை. ஆனாலும்,

† 'நெடிய வேதநூல் நிறைய ஆகமம்
முடிய ஓதிய முறையில் நிற்கெனும்
வடுவில் இல்லற வாழ்க்கை யின்றிநின்
அடிய ருச்சனைக் கருகன் ஆவனோ?' என்று கூறிய

தருமியின் கொள்கைப்படி இல்லற வாழ்க்கையின்றி இறைவனடி சேர்தல் இயலாதாதலால் இவரும், குடிப்பிறப்பும், குணச்சிறப்பு முடைய மங்கையை மணந்து அறவோர்க் களித்தல், அந்தணரோம்பல், துறவோர்க்கெதிர்தல், தொல்லோர் சிறப்பின் விருந்தெதிர் கோடல் முதலான இல்லற ஒழுக்கங்களில் தவறுதொழுகி இனிது வாழ்ந்திருந்தார் என்று கூறல் பொருந்தும்.

ஆயினும் நாள்தோறும் ஆலமர் கடவுள் ஆலயம் சென்று அடியார்களை முதலில் வணங்கிப் பின் அங்கணனது அடிகளைத் தொழுதேத்தி மீள்வதில் என்றும் தவறியதில்லை. இங்ஙனம் இறைவனிடத்தும் அவனடியாரிடத்தும் பக்திபூண்டு வணங்கி மகிழ்ந்து வருநாளில்,

† திருவிளை. தருமிக்குப். 86

சேரநாட்டிலே யன்றிச் சோழ பாண்டி நாடுகளிலும் சென்று, நதியும் மதியும் வெய்ந்தசடை நம்பன் நாடி மகிழ்ந்தருளும் பதிகள் பலவும் சென்றிறைஞ்சிப் பதிகம் ஓதிவர நினைந்தார். அங்ஙனமே புறப்பட்டு, காடும் மலையும் சோலைகளும், கழனிப்பரப்பும் ஏரிகளும், ஓடும் ஆறும் ஊர் பலவும், ஒருங்கே தாண்டி அங்கங்கே நீடும் கொடிகள் ஆடுகின்ற நித்தன் மகிழும் ஆலயத்தைப் பாடிப் புகழ்ந்து தொழுதேத்திப் பாண்டி நாட்டின் கரை யடைந்தார்.

பாண்டிமா நாட்டிலுள்ள பற்பல கோவில் தோறும் தூண்டிய ஆர்வத்தாலே தொழுது வீழ்ந்திறைஞ்சிப் பின்னும், வடதிசை நோக்கி வழிப்படலானார். காவிரி பாயும் கழனிப்பரப்பும், பூவிரி சோலையும் பொய்கையும் கண்டு, சோழவளநாட்டின் தொன்மையதாயும், சுந்தரப் பெருமான் தோன்றிடமாயும், தம்பிரான் தோழரும் அவர் தோழராய சேரமான் பெருமாளும் சந்தித்ததாயும், புற்றிடங்கொண்ட பிரான் பொலிந்து நிற்பதாயுமுள்ள புண்ணிய பதியான திருவாரூரைச் சென்றடைந்தார்.

தொலையில் வரும்போதே மலைபோலுயர்ந்த கோபுரத்தையும், கோவிலையும் கண்டு வணங்கி மெய்ம்மயிர் சிலிர்த்துப் புளகிதங்கொண்டு பத்திப்பெருக்கால் பரவசராகி, நாதன்புகழைப் பன்முறை நவின்று, அஞ்செழுத்தினையும் நெஞ்சினில் ஊன்றி, ஆடிப்பாடி ஆனந்தங்கொண்டு, ஆரூர் நகரை வலமா வந்து, உட்புகுந்தார். இருவினையாகிய இடர்களைக் களைந்து சிவமாம் தன்மைப் பெருவாழ் வளித்து திவ்விய உருவாய்த் திகழச்செய்யும் திருவருட் செல்வம் வாழ் இடமாகிய தேவாசிரிய மண்டபம்

சேர்ந்தார். 'யாவராயினும் அன்பரன்றி அறியொணா மலர்ச் சோதியான்' என்னும் மணிவாசகப் பெருமான் அணிவாசகப்படி அருள், அன்பு என்னுமிருகண்களை அடியவரால் அடையப்பெற்ற அன்புடையாளர்க்குப் புற்றிடங்கொண்ட பிரான் பொலிந்து தோன்றுவனே அன்றி வன்மையாளர்க்குத் தோன்றான் ஆதலால் அம் மண்டபத்தில் அன்பும் அருளுமுடைய அடியவர்பால் அவ் விரண்டையும் பெற்று அதன் பின்னர்ச் சென்று இறைவனை வணங்குவதே அத்தல வழக்கம். இம்முறையை உணர்ந்தவரும், இம்முறைப்படியே ஆங்காங்குச் சென்று ஆலயங்கள்தோறும் அடியாரைத் தொழுது பின் ஈசரைத் தொழுது வருபவருமான விறல்மிண்டர், இங்கும் தேவாசிரிய மண்டபமடைந்து அடியார் அடிபோற்றி ஆங்கு நின்றனர்.

அப்போது ஆரூர் உய்ய அவதரித்தருளிய தம்பிரான் தோழராகிய சுந்தரமூர்த்திப் பெருமான், நாள்தோறும் நம்பன் அடிபோற்றி மகிழ்ந்து செல்லும் வழக்கமுடையவர், அன்றும் கோவிலினுட் புகுந்தனர். புகுந்தவர் திருநீறு பொலியத் தேவாசிரியன் மண்டபத்தே இனிது வீற்றிருக்கும் இறைவனடியாரை வணங்காது ஒருபுறமாய் ஒதுங்கிச் சென்றார். கண்டார் விறல் மிண்டர். "என்னே! இவ்வாரூரர் செய்கை. அடியார்பத்தி இலர் ஆயினரே இவர்! அடியாரிடம் பத்தியின்றி ஆண்டவனிடம் அருள்பெறுவதெவ்வாறு? 'சிவனடியாரைச் சேவிப்பதே சிவபிரானைச் சேவிப்பதாகும்' என்னும் உண்மையைத் தெரிந்தாரில்லைபோலும். அன்றித் தெரிந்தும் அதனைப் புறக்கணித்தாரோ? எங்ஙனமாயினும் இவர்

சிவனடியார்களுக்குப் புறம்பானவரேயாவர். மாத்திர மல்ல; இவர் ஒழுக்கங்களை அறிந்தும் வலிய வந்து ஆட் கொண்டாரே சிவபிரான், அவரும் புறம்பானவரே" என்று சற்றும் அஞ்சாது, அடியார் நிந்தனை யென்றும் சிவநிந்தனை யென்றும் சிறிதும் எண்ணாது அணை கடந் தோடும் அடியார்பத்தியின் பெருக்கினாலே அப்பொழுதே மொழிந்திட்டார். விறல் மிண்டரின் பத்தியன்றோ பத்தி! இவர் வீரமன்றோ வீரம்! வலிமைபொருந்திய மலைநாட் டிலே பிறந்தவர் மனவலிமையும் படைத்தவர் என்பதற்கு எடுத்துக் காட்டாய் விளங்கினார் இவர்.

இச் சொற்கள் ஆரூரர் செவிகளிலே வீழ்ந்தன. திரும்பிநோக்கினார். சிவபிரானுக்கு எது உகந்ததா யுள்ளதோ அதனையே பெற்ற விறலாளராகிய மிண்ட னாரைக் கண்டார். அப்புண்ணியன் கொண்ட சிவ வேடம் இன்னும் பத்திக்கடலுக்குள் ஆழ்த்தியது. அவர் வாய்ச் சொற்கள் தன் மனத்துக்குள் ஆழப்பதிந்து நல்ல சூடு கொடுத்தன. தன் தவறை உணர்ந்தார். தன்னைத் திருத்துவதற்கே எம்பெருமான் சிவவேடம் பூண்டுவந்தார் என்றெண்ணினார். நேரே சென்று அவரடிகளிலே பொருந்த விழுந்து வணங்கினார்.

மிண்டனாரும் உடன் தானே அவரை வணங்க, பத்திப்பேரின்பத்தே இருவரும் ஒன்றாய்க் கலந்தனர். பின் சுந்தரர், தாம் புரிந்துவந்த தவறை எடுத்துக்கூறித் திருத்திய மிண்டனாரது பெருந்தகைமையையும், அடி யார் பத்தியையும் வெகுவாகப் புகழ்ந்துவிட்டு, விடை பெற்று, விடையேறிய பெம்மானை வணங்கி யெழுந்தார். அப்போதே சிவனடியார்களைத் தாம் வணங்காதிருந்த

குறை நீங்கவும், அவர்களது புகழை என்றும் யாவரும் உணர்ந்து பாடி உய்யும்பொருட்டும் தில்லையிலே வாழுகின்ற அந்தணர் மூவாயிரவர் முதலாகவுள்ள அடியவர் திருப் பெயர்களையும், அவர் ஆற்றிய அறங்களையும் தொகுத்து 'திருத்தொண்டத்தொகை' என்னும் தேவாமிருதத்தைப் பாடி உலகுக்களித்தனர். இங்ஙனம் விறல் மிண்டர் கூறிய 'புறகு' என்னும் சொல்லானது சேக்கிழார் பெரு மானின் பெரிய புராணம்வரைத் தந்து சைவசமயத்தின் மேம்பாட்டை விளக்கிக்காட்டி, கற்றுரைக் கடைத்தேற்ற வல்ல கருவியாயிற்று.

இனிச் சிவபிரானே தன்னையும் புறகு என்று கூறிய விறல்மிண்டன் சிவாபராதம் செய்ததாகக் கருதாது, முன் ஆரூரர் தம் நாவால் 'பித்தன்' என்று கூறக்கேட்டபோது பெரும்பேறு பெற்றதாக மகிழ்ந்தருளினமைபோல, இப்போதும் அன்பன் தனக்கணிந்த அணிகலன் என்றே கருதி மகிழ்ந்து அவரை ஆட்கொள்ளத் திருவுள்ளங் கொண்டார். நெடுநாளளவும் இவ்வுலகிலே திருநெறித் தொண்டு பூண்டொழுகிய விறல் மிண்டப் பெருமான் கடைநாளில் எம்பிரான் அருளால் அவரடிக்கீழ்த் தங்கி சிவகணங்களுக்கு நாதராகும் பெரும்பேறு பெற்றார்.

---

# 10. குலசேகராழ்வார்.

திருமால் எழுந்தருளி மகிழ்ந்து இனிதுறையும் திருப்பதிகள் நூற்றெட்டனுள் பதின்மூன்றினைத் தன்னுள் அடக்கி விளங்கும் சேரநன்னாட்டிலே திருவஞ்சைக்களம் என்னும் சீரிய நகரினை அரசிருக்கையாகக் கொண்டு ஆண்டு வந்தார் திடவிரதரென்னும் வேந்தர் பிரான். தமக்கு வெகுநாளளவும் பிள்ளையில்லாக் குறையைப் போக்கிக்கொள்ள எண்ணி அனந்தப் பாயலில் அறிதுயில் அமரும் அங்கணனை வழிபட்டு, திடமான விரதங்கள் பல செய்துவந்ததன் பயனாகத் திருமால், தம் திருமார்பி லொளிரும் கௌஸ்துப மணியின் அம்சமான அழகிய மகவொன்றை அவர்க்கு அருளினார். மகப்பிறந்த மகிழ்ச்சி மன்னனை இன்பக்கடலுளாழ்த்தியது. உரிய காலத்தில் பெயரிடும் சடங்கு புரிந்திட எண்ணி 'இம்மகன் தங்குலத் துக்குத் தலைக்கலன் போல விளங்கி யாவராலுங் கொண் டாடத் தக்கவன்' எனக் கொண்டு குலசேகரன் என்னும் பெயரிட்டார்.

பின்பு, இவ்விள மகன் நாளொருமேனியும் பொழு தொரு வண்ணமுமாக வெண்ணிலவெனத் தண்ணொளியும், நல்லெழிலும் பெற்று ஐந்தாம் பருவத்தை யடைந்தான். நல்லாசிரியர் ஒருவர் துணைக்கொண்டு நால்வேதம் ஆறங் கங்களையும், புராணம் இதிகாசம் முதலிய சகல சாத்திரங் களையும் நீதிநூல்களையும் ஐயமறக் கற்றான். அன்றியும் அரசர்க்குரிய யானை யேற்றம், குதிரை யேற்றம், வில் வித்தை, வாள்வித்தை, சிலம்பம் முதலியனவும் குறைவறக்

கற்று வல்லவனானன். மைந்தன் திறத்தைக் கண்டுகளித்த காவலனும் அவனுக்கு இளவரசுப்பட்டம் சூட்டினார்.

பின்னர்க் குலசேகரன், தன் பேராற்றலை விளக்க எண்ணி நாற்றிசையும் சென்று வேற்றரசரை யெல்லாம் வெஞ்சமத்தால் வென்று அவர்கள் நாடுகளைத் தன்ன தாக்கினார். ஏனைச் சோழ பாண்டியராகிய இருபெரு வேந்தருங்கூட இவரடிபணிந்தார்கள். இங்ஙனம் எவர்க்கும் தான் தலைமை பூண்டதன் அறிகுறியாகக் 'கொல்லிகாவலன், கூடல் நாயகன், கோழிக்கோன் குலசேகரன்' எனப் பல சிறப்புப் பெயர்களைப் பெற்று மீண்டு வந்தார். பிறகு திடவிரதர் தன் மைந்தனது இளமையின் கவர்ச்சியையும், தன் முதுமையின் வளர்ச்சியையும் நன்கறிந்து மகனுக்கே மணிமுடி சூட்டி உயர்கதி யடையத் தங்குல வழக்கப் படியே தவவனம் சென்றார்.

தந்தையின் பிரிவுக் காற்றாது நொந்து, பின் மந்திரிகள் தேற்றத் தேறிய மன்னவர் நடுவுநிலை பிறழாது, நலிவு ஏற்படாது, பசியும் பிணியும் பகையும் அகல, வசியும் வளனும் இன்பமும் மல்க, இருநிலங்காத்து இனிதே வீற்றிருந்தார். தகுந்த காலத்தே மங்கையர் மணி ஒருத்தியை மணம் புரிந்து இல்வாழ்க்கையைச் செவ்வனே நடத்திவரலானார். சிறிது காலம் செல்ல, திருமாலின் தேவியர் மூவருள்ளே நீளா தேவியின் அமிசமான பெண்மகவொன்று பிறந்தது. அதற்கு 'இளை' எனப் பெயரிட்டார். இன்னும் சிறிது காலம் சென்ற பின்னர் தங்குலம் விளக்கும் குலக்கொழுந்தாய ஆண்மகவொன்று பிறந்தது. திடவிரதரென்னும் தன் பிதாமகன் பெயரையே அவ்வாண்மகன்

சூட்டப்பெற்றான். இங்ஙனம் அருமைக்கோர் ஆணும் பெருமைக்கோர் பெண்ணும் பெற்றுக் கவலையற்று வாழலானார் குலசேகரர்.

ஆனால் அவருள்ளத்தே முடிவுகாண முடியாவகை ஓரெண்ணம் அடிக்கடி தோன்றிக்கொண்டே இருந்தது. அஃதாவது 'இம்மை மறுமை வீடென்னும் மும்மையின்பமும் தரவல்ல முழுமுதற் கடவுள் யாவன்?' என்பது தான் அவ்வெண்ணம். இதற்காக நற்கலை வல்ல பற்பல பண்டிதருடனே நாள்தோறும் வேதம், இதிகாசம் புராணம் முதலியவற்றை ஆராய்வாரானார். ஆயினும் எம்முடிவும் அவருள்ளத்தே எழுவதாயில்லை. இங்ஙனம் குழப்பமென்னும் கடலுளாழ்ந்து கரைகாணுவாறு தத்தளிக்கும் காவலனது மனப்பாங்கை அறிந்த பெருமால் கெடுக்கும் திருமாலானவர் அவரை ஆட்கொளக் கருதி 'திருமாலே சிறந்த தெய்வம்' என்னும் சித்தாந்தத்தை அவர் சித்தத்தே நிலைநாட்டினார்.

இதன் பின் எவ்வுயிருக்கும் இறைவன் இவன் என அறிந்து அவனது அவதார மகிமைகளை எண்ணி இன்பமெய்தி, அவற்றுள் இராமாவதாரத்திலும், கண்ணவதாரத்திலும் தன் முழு மனத்தையும் ஈடுபடுத்திப் பத்திப் பெரு வெள்ளத்தே முங்கித் திளைப்பாரானார் குலசேகரர். இராமகிருஷ்ணவதார உருவங்களைத் தம் அரண்மனைக் கோவிலிலே எழுந்தருளப் பண்ணி, அவர்க்குத் தினமும் பூவும் புகையும் பொங்கலும் சொரிந்து, விழவும் சிறப்பும் வேறுவேறெடுத்தனர். அன்றியும் இறைவனடியார்களாகிய பாகவதர்களிடத்திலும் பக்தியுடையவராய், அவரைக்

கண்டால் திருமாலையே நேரில் கண்டதா யெண்ணிக், தம் அரண்மனைக்கு அழைத்துவந்து உபசரித்து வணங்குவதையும், புராணம் வல்ல பண்டிதர்களைக் கொண்டு தினந்தோறும் இராமாயண காலக்ஷேபம் செய்வித்து பத்தி சிரத்தையுடன் கேட்டு வருவதையும் த ரு ஒழுக்கமாகக் கொண்டார்.

ஒருநாள் அரண்மனையில் புராணப்பிரசங்கம் ஆரம்பமாயிற்று. பௌராணிகர், எடுத்துக்கொண்ட பாகத்தை இனிமையாக விரித்துரைக்கலானார். அன்று ஆரணிய காண்டத்திலே கரதூடணர் வதம். பண்டிதர், 'இளைய பெருமாளால் மூக்கறுப்புண்ட இராவணன் தங்கையான சூர்ப்பனகை, தன் அண்ணனால் தனக்குக் காவலாக நியமிக்கப்பட்டிருந்த கரன், தூடணன் என்னு மிருவரிடத்திலும் சென்று முறையிட, அவர்கள் கடுஞ்சினம் மூளப்பெற்றுப் பெருஞ்சேனைகளைத் திரட்டிக் கொண்டு போருக்குவர, பெருமாள் இலக்குவனைப் பிராட்டிக்குக் காவலாகப் பன்னசாலையிலே வைத்துவிட்டுத் துணையின்றித் தன்னந் தனியனாய் நடந்து சென்று அப் பொல்லா அரக்கர்களெதிரே நின்றார்" என்று அழகுபடக் கூறினார். தன் முழு அன்பையும் கவர்ந்த இராமனது தனிமையை விரித்துக் கூறிய வெவ்வுரை ஆழ்வாரைத் துன்பக் கடலுள் ஆழ்த்தியது. இராமசரிதம் அப்போது நடப்பதாகவே எண்ணினார். உலகையே மறந்தார். 'ஐயோ! என் இராமபிரான் கொடிய அரக்கரெதிரே ஒண்டியாய் நிற்கின்றானென்று கேட்டும் வாளா இருக்கின்றேனே. இக்கணமே ஓடிச்சென்று உதவாமல் இருப்பது தகுமோ? பெருஞ்சேனைகளும்

அரசிருக்கையும் எதற்கென்று படைத்தேன்? இதோ என் படைகளுடன் சென்று அக்கொடிய அரக்கர்களைக் கண்டதுண்டம் செய்து என் பிரானுக்குதவி செய்கிறேன்' என்று துணிந்து, சேனைகளை அணிவகுக்கப் பணித்துப் புறப்படவும் சித்தமாயினர்.

பார்த்த யாவரும் திடுக்கிட்டனர். அரசர் சித்தப் பிரமை கொண்டாரோ என்று அயிர்த்தனர். பத்திப் பெருவெள்ளமே அரசரை இங்ஙனம் இழுத்துச் செல்கின்றதென்பதைத் தம் நுண்ணுணர்வால் எண்ணியுணர்ந்த அப்பண்டிதர், தம் பிரசங்கத்தை மேலும் நடத்தி 'அவையோர்களே! இராமபிரான் தனியனுகச் சென்றார் என்பது உண்மைதான்; ஆயினும் பேரரக்கர்களான மது, கார்த்தவீரியன், கடோற்கசன், சகடாசுரன் போன்றவர் களைக் கொன்றொழித்த திருமாலின் அம்சமான இராம பிரானுக்கு இந்தக் கரனும் தூடணனும் எம்மட்டு? ஆகவே எதிர்த்துவந்த அரக்கரனைவரையும் தாமொருவராகவே அஞ்சாது நின்று கொன்று குவித்து வென்றிவீரராய்த் திரும்பிவந்தார் பெருமாள். அவரைக் கண்ட இளைய பெருமாளும் பிராட்டியாரும் எல்லையில்லா மகிழ்ச்சியுடன் ஓடோடியும் வந்து அவரை யடைந்து இன்சொற் கூறி வரவேற்று உபசரித்துக் களைப்பைப் போக்கினார்கள்' என்றுகூறினர். அதனைக்கேட்ட ஆழ்வார் "ஆ! என் இராமர் வந்தாரா? நன்று. சேனையுடன் சென்று என் பெருமானுக்கு உதவிபுரியும் பாக்கியம் பெற்றேனில்லை; ஆயினும் பொல்லா இராக்கதரெதிரே தனியனாய்ச் சென்ற இராகவன் வென்றியோடு மீண்டாரே, அதுவே போதும்" என்று

கூறி ஆனந்தத் தாண்டவம் புரிந்தார். பயணமும் நின்று விட்டது.

அது முதல் புராணப்பிரசங்கம் செய்பவர் இராமனுக்கு வெற்றி யுண்டாகும் இடங்களை விரித்துரைத்தும் துன்பம் நேரு மிடங்களைச் சுருக்கிக் கூறியும் வந்தார். இங்ஙனமிருக்க, வேந்தன் மனநிலையை நன்கு அறிந்திருந்த அப் புராணிகர் எக்காரணத்தாலோ திடீரென்று வேற்றூர் செல்லவேண்டியவர், அன்று தன் மகனை இராமாயண காலட்சேபம் செய்வதற்கு அரண்மனை செல்லப் பணித்து விட்டுச் சென்றனர்.

அன்று இராவணன் சீதையைத் தூக்கிச் செல்வதாகிய பாகம். இத்துன்பகரமான பகுதியை உணர்ச்சி ததும்ப மிக விரிவாக எடுத்துரைத்தார் இளம் பௌராணிகர். இது கேட்டிருந்த மன்னவர் வாட்டங் கொண்டார். அடுத்த நிமிடத்தில் அவருள்ளம் கொதித்தது. பெருஞ்சீற்றம் பொங்கி யெழுந்தது. "எம்பெருமான் இல்லாச் சமயம் பார்த்து எம்பிராட்டியைத் தூக்கிச் சென்ற அக் கள்ள இராக்கதக் கன்னெஞ்சப் பாதகனை இதோ என் உடைவாளுக் கிரையாக்குகின்றேன். எறி கடல் தாண்டி இலங்கை சென்று இராக்கதக் கொடியோனுய இராவணனை அவன் குலத்தோடழித்துக் குலராமன் தேவியை மீட்டு வராமல்போனால் யானும் மன்னனாவனோ?" என்றுகூறிச் சேனைகளைச் சித்தம் செய்வித்துப் போர்க் கோலம் பூண்டு புறப்படலானார். கண்டவரெல்லாரும் பெருவியப்புக்கொண்டு மூக்கில் விரல்வைத்து நோக்கிநின்றனர்

இது நமக்கும் பேராச்சரியத்தையே விளைவிக்கின்ற
தெனினும் நடக்கக் கூடியதோ என்று ஐயப்படுவதற்கில்லை.
ஏதேனும் ஒரு விடயத்தில் தம் முழு மனத்தையும் இல
யிக்க விட்டவர்கள், தான் அதற்குப் புறம்பு என்பதை
மறந்து அதுவே தானாய் இத்தகைய செயல்கள் புரிவது
இயல்புதான். பஞ்சவர்க்காய்க் கண்ணன் துரியோதனனிடம்
தூது சென்ற காலை, அவன் ஐந்து ஊசி நாட்டுவதற்குள்ள
இடம் கூடத் தன்னால் கொடுக்க முடியாதென்று கூறித்
தன் கன்னெஞ்சக் கொடுமனத்தை வெளியிட்டுக் கூறிய
போது, பார்த்திருந்த ஒருவன், தான் காண்பது நாடக
மென்பதை அடியோடு மறந்து ஓடிச்சென்று 'அடே
துஷ்டா! நீ அவ்வளவு இடங் கொடுக்காவிட்டால் நான்
ஐந்து காணி நிலம் கொடுக்கிறேன் பார், ஆயினும் கொடிய
னான நின்னை வைத்திருக்கப் போவதில்லை' என்றுகூறிக்
கத்தியால் அவன் வயிற்றைக் கிழித்த செய்தி பலருக்கும்
தெரிந்த தன்றோ? இன்னொரு நாடகத்தில் ஏழைச் சிறுவ
னொருவன் இறந்து கிடந்த தன் தந்தையை அடக்கம்
செய்வதற்குப் போதிய பணமில்லாமையால் இரந்து
புலம்பிக் கண்ணீர் வடிக்கும் பரிதாப நிலைக்குப் பொறாராய்
உள்ள மிளகிய உலோபி ஒருவர் தம் சட்டைப்பையில்
இருந்த பத்துரூபாய் நோட்டொன்றைக் கையிலெடுத்து
ஓடிச்சென்று அவனிடம் கொடுத்தனர். நாடக உறுப்பின
ருள் கொடியவன் ஒருவனது வேடம் தாங்கி நடித்தபோது
அது நாடக மென்பதையும் மறந்து கொடுமையைக் கண்டு
பொறாது பெருஞ் சீற்றங் கொண்டு, தன் காலில் கிடந்த
மிதியடியைக் கழற்றி வீசி எறிந்த பெரியார் ஒருவர்
செய்கையும் உண்மை நிகழ்ச்சியாம். ஆகவே, பத்திப்

பெருவெள்ளத்தே தத்திக் குளிக்கும் ஆழ்வார், தன்னு பிரான இராமபிரானுக்குத் துணையாக ஆழ்கடலைக் கடக்கத் துணிந்தது மனித இயல்போடு மாறுபடாச் செய்கை என்றே கொள்க.

ஆழ்வார் தென்றிசை நோக்கி நடந்து, கடலை அடைந்தார். அதனை நீந்திக் கடப்பதென்றே தீர்மானித்து விட்டார். கழுத்தளவு நீரில் இறங்கியும் விட்டார். இன்னும் சற்று இறங்கியிருந்தால் திட்டமாகவும் ஆழ்வார் ஆழ்வார். ஆனால் உண்மையில் உவர் நீரிலன்று, பத்திப் பெரு வெள்ளத்தே ஆழநிற்கும் ஆழ்வாரைக் கரையேற்றத் திருவுள்ளங்கொண்ட கருணை மூர்த்தி,

> † 'கருமுகில் தாமரைக் காடு பூத்துநீ
> டிருசுடர் இருபுறத் தேந்தி ஏடவிழ்
> திருவொடும் பொலியவோர் செம்பொற் குன்றின்மேல்
> வருவபோல் கலுழன்மேல் வந்து தோன்றினன்.'

"குலசேகரா! இராவணன் நம் தேவியைத் தூக்கிச் சென்றது உண்மையேனும், நாம் இலங்கை சென்று இராவணனை அவன் குலத்தோடும் அழித்துத் தேவியை மீட்டு வந்துவிட்டோம். நீ வருந்தாதே கி வளநாடாள் வாய்" என்று திருவாய் மலர்ந்தருளி, பிறவிப் பெருங்கடலி னின்று கரையேற்றுவதற் கறிகுறியாக அவரை அரபிக் கருங்கடலினின்று கரையேற்றி மறைந்தருளினார். இங்ஙனம் பெருமாளுடைய (இராமபிரானுடைய) இன்ப துன்பங்களைத் தன்னுடையனவாகக் கருதியதனாலேயே இவர் 'பெருமாள்' என்னும் சிறப்புப் பெயர் பெற்றார்.

---

† கம்பரா. பால. 191.

எம்பெருமானது திவ்விய சரிதைகளைக் கேட்பதிலும், அவன் அடியார்களாகிய பாகவதர்களை உபசரிப்பதிலும் ஈடுபட்டவராய்ப் பத்திபண்ணி முத்திபெறும் வழிகாண முனைந்து நிற்கும் குலசேகரர், பாகவதர்கள் மூலம் திருவரங்கத்தின் மேன்மைகளைக் கேள்வியுற்று ஆங்குப் போவதற்குப் பெருவிருப்பங் கொண்டார். இதனை அறிந்த அமைச்சர்கள், அரசர் திருவரங்கம் சென்றால் மீளுவதரிதென்றும் அதனால் அரச காரியம் தடைப்படுமென்றும் உணர்ந்து யாத்திரையைத் தடுக்கத் தந்திரமொன்று செய்தனர். வைணவர்களை உபசரிப்பதில் அரசன் பெருவிருப்பினன் ஆதலால் தினந்தோறும் பன்னூறு பாகவதர்களை வருவித்து அரசன் முன் அனுப்புவதென்று தீர்மானித்தார்கள். 'அறுபதினாயிரம் வருடம் திருமாலாலயம் சென்று வணங்குவதினும் ஒருமுறை பாகவதர்களைப் பூசித்தல் பெரும் பயன் தருவது' என்னும் சாத்திர விதியை அறிந்துணர்ந்த சேரமான், திருவரங்கத்துக்குச் செல்ல வேண்டுமென்னும் பெருவிருப்பை அடக்கிக் கொண்டு திருமாலடியார்களுக்கு அறுசுவை உண்டி அளித்து ஆராதனை புரிவதிலே முனைந்தார். இவ்வாறு நாள்தோறும் பல பாகவதர்களை அனுப்பி அரசனை நகரம் விட்டேகாமல் மந்திரிகள் தம் தந்திரத்தால் தடுத்தனர்.

வைணவகுழாம் நாடெங்கும் மலிந்தது. அரண்மனையும் அவர்களுக்குச் சொந்தமாயிற்று. கொலுமண்டபம், பட்டிமண்டபம், இன்னுமுள்ள அந்தரங்க இடங்கள் எங்கும் அவர் தட்டுத்தடையின்றிச் செல்ல உரிமை பெற்றனர். இவர்களது எல்லை மீறிய சுதந்திரம் அமைச்சரது உள்ளத்தே அழுக்காற்றை எழுப்பியது. ஆதலால்

பாகவதர்கள்பால் அரசனுக்குப் பகைமையை உண்டு பண்ணி அவரை வெளிப்படுத்தத் தருணம் நோக்கினர்.

இராமபிரானது பிறந்தநாளாகிய ஸ்ரீராம நவமி வந்தது. அது, ஆண்டுதோறும் மிகச் சிறப்பாக அரசனால் கொண்டாடப்படும். அதுபோல அன்று நகரம் முழுவதும் மகர தோரணங்களாலும், வாழை தென்னை கமுகு முதலியவற்றாலும் அழகுபடுத்தப்பட்டது. வீடுகளெல்லாம் தூய்மைப் படுத்தினர். தெருக்களில் புதுமணல் பரப்பினர். முற்றங்களில் சந்தனக் குழம்பால் மெழுக்கிட்டு, பொற்சுண்ணம் தூவி, பூரணகும்பமும் பொற்பாலிகையும் வைத்தனர். திண்ணைகளிலும் தூண்களிலும் முத்துத் தாமம் தூக்கினர். பாவை விளக்குகள் பலவும் பரப்பினர்.

அரண்மனையிலேயுள்ள இராமமூர்த்திக்குப் பெருவிழா எடுக்க ஆயத்தம் செய்யப்பட்டது. அர்ச்சகரெல்லாரும் ஒருங்கு கூடினர். ஆலயம், காண்போர் உள்ளம் களிகொள்ளக் கவினுடன் விளங்கியது. இறைவர்க்குத் திருமஞ்சனம் செய்யும் நேரம் அடுத்தது. முதலில் திருவாபரணம் அனைத்தையும் கழற்றி வைத்தனர். பின்பு வேதஒலியோடு திருமஞ்சனம் நடந்தேறியது. இறைவர் சேவையில் அர்ச்சகரெல்லாரும் கருத்தூன்றி நிற்கும் காலமறிந்து, திருவாபரணங்களினின்றும் நவரத்தினமாலையொன்றை மெல்ல எடுத்து ஒளித்துவைத்தனர் அமைச்சர்கள். பின்பு, பெருமாளுக்கு அலங்காரம் செய்யும்போது அணிகலனைக் காணாமையால் அர்ச்சகர் திகைத்து அரசர்க்கு அறிவிக்க, அவரும் திடுக்கிட்டு அமைச்சரை

அழைத்து 'நகை திருடிய கள்வனை விரைவில் கண்டுபிடியுங்கள்' என்று ஆணையிட்டனர். இதுகேட்ட அமைச்சர்கள், தங்கருத்தை முற்றுவிக்கும் தருணம் வாய்த்ததை எண்ணி மகிழ்ந்து "அரசே! இது திருடியவர் நம் அரண்மனையில் தட்டுத்தடையின்றித் திரியும் பாகவதரேயன்றி வேறெ வருமல்லர். மற்றையோராயின் அஞ்சாது அரண்மனைக்குள் புகார்; துணிந்து இச்செயல் செய்யவும் பெறார்' என்று பாகவதர் மீது பழியைச் சுமத்தினர். கேட்ட அவர்கள் திடுக்கிட்டுச் செய்வகை யறியாது திகைத்து நின்றார்கள்.

இக்கொடுஞ்சொல் செவிப்புலம் புகப் பெற்ற வேந்தன் 'ராமராம' என்றுகூறி இரு காதுகளையும் பொத்திக் கொண்டு "என்ன கூறினீர்! மந்திரத்தொழில் வல்ல நீவிர் ஆராயாது கூறுதல் அழகோ? இறைவனடியாராகிய பாகவதர்களோ இச்செய்கை செய்பவர்? அவர் இக்களவை மனத்தால் நினைக்கவும் செய்யார். இதனை நான் திண்ணமாக நம்புகின்றேன். நுமக்கு இச்சொல்லில் நம்பிக்கை யின்றேல் எத்தகைய பிரமாணமும் நானே செய்து தருவேன்" என்றுகூறிக் 'குடமொன்றில் கொடிய பாம்பினை யடைத்துக் கொணர்க' எனப் பணித்தார்.

பாகவதர், அமைச்சர், புலவர் முதலியோர் கூடியிருந்த சபையிலே பாம்படைக்கப்பட்ட குடமொன்று கொண்டுவரப்பட்டது. குலசேகரர் கூடியிருந்தோரை நோக்கி, "சபையீர்! திருமாலடியார்கள் திரிகரணத்தாலும் தூயவரென்று நிரூபிக்க இக்குடத்துள்ளே என் கையை நுழைக்கின்றேன். அவர் பொய்யராயிருப்பின் இந்நாகம் என்னைத் தீண்டட்டும். இன்றேல் எனக்கு ஏதும் ஏதம்

செய்யாது" என்றுகூறிக் கையைக் குடத்துளிட்டார். என்னே! இவரது பத்தியின் மாண்பு. இத்தகைய பத்திப் பெருக்காலன்றோ ஆழ்வாரென்னும் பெயர் பெற்றாரிவர்.

இங்ஙனம் கை நுழைக்கவும் தலையெடாது தணிந்திருந்த நாகத்தின் தன்மையை நோக்கிச் சபையோர் யாவரும் பெருவியப் பெய்தினர். அமைச்சரோ, தம் சூழ்ச்சி சிறிதும் பலியாது போனதுபற்றி வருத்தமும், அரசனுக்குள்ள அடியார் பத்தியின் பெருமையைக் கண்டு வியப்பும், தாம் ஆராயாது தவறு புரிந்திட்டது பற்றிக் கழிவிரக்கமும், அரசன் உண்மை யுணர்ந்தால் என்ன நேருமோ என்பது கருதிப் பேரச்சமும் கொண்டு நடு நடுங்கினர். உண்மையை ஒளியா துரைத்தலே தக்கதென்றுன்னி நகையைக் கொணர்ந்து அரசர் திருமுன் வைத்து 'செய்பிழை பொறுப்பாய்' என்று அவன் திருவடி தொழுது மன்றாடினார்கள்.

ஆழ்வார், மிக்க பொறுமை யுடையவராதலால் பிழையைப் பொறுத்து நல்லறி வூட்டக் கருதி, "நீங்கள் இழைத்த பிழை நினைக்கவும் அச்சந்தரும்; அதனையும் இறைவனடியாராகிய பாகவதரிடத்தே புரிந்தீர்கள். அவர்களே உங்களை மன்னிக்கத் தகுந்தவர்கள். ஆதலால் அவரடி போற்றிப் பணிவிடை புரிதலே அப்பழியினின்று உய்யும் வழியாகும்" என்றுகூற, அவர்களும் நல்லறிவு பெற்று அடியவர்க்கு அடித்தொண்டு புரிந்து நற்பயன் பெற்றனர்.

திருமாலிடத்திலும், திருமாலடியவரிடத்திலும் பத்தி பெருகப்பெருக, அரசாட்சியில் விருப்பம் அருக ஆரம்பித்தது.

† "கம்ப மதயானைக் கழுத்தகத்தின் மேலிருந்து
இன்பமரும் செல்வமும் இவ்வரசும் யான்வேண்டேன்
எம்பெருமான் ஈசன் எழில்வேங் கடமலைமேல்
தம்பகமாய் நிற்கும் தவமுடையன் ஆவேனே". என்று

அவர் கூறியவாறு இல்லறவாழ்வில் நின்று நீங்கி, இறைவர் சேவடிப் போதையே எப்போதும் தொழும் பேற்றைப் பெற நினைந்தார். திடவிரதனென்னும் தன் மகனுக்கு நன் முழுத்தத்தே பொன்முடி சூட்டினார். அரசபாரம் இறங்கியதும் அப்பாடா என்றார். அப்போதே திருவரங்கம் சென்றார். அழகிய மணவாளனைக் கண்ணாரக் கண்டார். களிப்பெனுங் கடலுளாழ்ந்தார். பத்திப்பெரு நீரிலே முங்கித் திளைத்தார். ஆ! அவரடைந்த ஆனந்தத்தை யாவரே விரித்துரைக்க வல்லார்? திருவரங்கப்பெருங் கோவிலில் எழுந்தருளியுள்ள அழகிய மணவாளனையே தனக்கு மணவாளனாகக் கருதியிருந்த தம் திருமகளை அப்பிரானுக்கு உரியவளாக மணம் செய்து, இறைவனுக்கும் இறைவனடியார்களுக்கும் தொண்டு செய்வதில் இறையளவும் வழுவாது ஒழுகி அத்திருபதியிலேயே சில காலம் தங்கியிருந்தனர்.

அக்காலையிலே பத்தியின் முதிர்ச்சியால் அவர் வாயினின்றும் எழுந்த செஞ்சொற் பாடல்கள் தேனினும் பாகினும் இனியவை. 'முகுந்தமாலை' என்னும் வடமொழி

† பெருமாள் திரு. 4 ஆம் திரு. 5

நூல் முத்திக்கொரு வித்து. செஞ்சொற் சுவையின் இருப்பிடமாகும். தென்மொழியில் பாடிய பதிகங்களோ செப்பும் தரமுடையன வல்ல. அவை 'பெருமாள் திருமொழி' என்னும் பெயரால் வழங்கப்படுகின்றன. பத்திரசம் சொட்டச் சொட்டப் பாடிய பனுவல் இதனினும் வேறில்லை என்னலாம். 'தருதுயரம் தடாயேல்' என்னும் பதிகச்செய்யுட்கள் பத்தும் எழுத்துக்கள் தோறும் பத்திச்சுவை ஒழுகும் எழில் நலம் வாய்ந்தவை யாகும். எத்தகைய வன்னெஞ்சனையும் நெக்குநெக் குருகச்செய்யும். அவற்றுள் ஒன்று கூறுவாம்.

* 'தருதுயரம் தடாயேல்உன் சரணல்லால் சரணில்லை
விரைகுழுவும் மலர்ப்பொழில்சூழ் வித்துவக்கோட் டம்மானே,
அரிசினத்தால் ஈன்றதாய் அகற்றிடினும் மற்றவள்தன்
அருள்நினைந்தே அழுங்குழவி யதுவேபோன் றிருந்தேனே'.

இவைபோல்வன பல. 'தேட்டருந்திறல்' என்னும் முதலையுடைய பதிகம் குலோத்துங்கசோழன் காலத்தே கோவில்களில் பாடும் பதிவு ஏற்படுத்தப் பட்டிருந்தது எனச் சிலாசாசனங்களால் அறியப்படுகின்றது. நிற்க.

ஆழ்வார் சிலகாலம் திருவரங்கப் பெம்மானையே சேவித்திருந்து, அங்கு நின்றும் புறப்பட்டுப் புண்ணிய திருப்பதிகள் பலவற்றுக்கும் சென்று எம்பெருமானை வணங்கித் துதித்துக் கடைசியில், நம்மாழ்வார் திருவவதாரஞ்செய்த திருக்குருகூருக்கு அருகேயுள்ள 'பிரம்மதேச'மென்னுமூரை யடைந்தார். அங்கு எழுந்தருளியுள்ள

---

* பெருமாள் திரு. 5 ஆம் திரு. 1.

'இராஜகோபால சுவாமி' சந்நிதியில் சிலகாலம் திருத்தொண்டு புரிந்தவண்ணமிருந்து தமது அறுபத்தேழாவது பிராயத்தே இறைவனது திருவடி நீழலை அடைந்தனர்.

இவர் திருமாலின் மீது பாடிய பாசுரங்களில் மிக்க கனிவும், இனிமையும், எளிமையும் கொண்டு விளங்குவது

$ 'செடியாய வல்வினைகள் தீர்க்கும் திருமாலே!
நெடியானே! வேங்கடவா! நின்கோயி லின்வாசல்
அடியாரும் வானவரும் அரம்பையரும் கிடந்தியங்கும்
படியாய்க் கிடந்துன் பவளவாய் காண்பேனே' என்பதாகும்.

இங்ஙனம் தன் அரசவாழ்வினும் இறைவரது கோயிற்படியாய் அமையும் பேறே பெரிதெனக் கருதியதனால் இன்றும் ஆலயங்களில் கோயிலினுள் வாயிற்படி ஒன்று குலசேகரன்படி' என்று வழங்கப்படுகின்றது. இவ்வாழ்வாரது அளவிறந்த பத்திக்கு இப்பாசுரமொன்றே போதிய எடுத்துக் காட்டாகும்.

முதற்பாகம் முற்றும்.



$ பெருமாள் திரு. 4- ஆம் திரு. 9.

# அரும்பத உரை.

| பக்கம். | பத்தி. | வரி. | சொல். | பொருள். |
|---|---|---|---|---|
| 1 | 1 | 12 | மன்ற | ... நிலைபேறில்லாத |
| ,, | ,, | 17 | தனையர் | ... புதல்வர் |
| 2 | ,, | 22 | பொன்ற | ... அழியாத |
| 3 | 3 | 2 | கனை | ... ஒலிக்கின்ற |
| ,, | ,, | ,, | பனி | ... குளிர்ச்சிபொருந்திய |
| 4 | 1 | 2 | ஆரம் | ... சந்தனம் |
| ,, | ,, | 6 | கலன் | ... ஆபரணம் |
| ,, | ,, | 7 | செவ்வி | ... ஏற்றசமயம் |
| ,, | ,, | 9 | ஆலை | ... கரும்பு ஆட்டிக்கட்டி எடுக்குமிடம் |
| 5 | 1 | 2 | நித்திலம் | ... முத்து |
| ,, | ,, | 4 | சேர்ப்பன் | ... நெய்தல்நிலத்தலைவன் |
| ,, | ,, | 8 | நனை | ... பூவரும்பு |
| ,, | ,, | 9 | கடிதல் | ... ஓட்டுதல் |
| ,, | ,, | 10 | தட்டை | ... கிளி ஓட்டும் கருவி |
| 7 | 1 | 14 | வெஞ்சினம் | ... கடுங்கோபம் |
| 8 | 1 | 1 | வீறு | ... பெருமை |
| ,, | ,, | 3 | கரந்துறை வாழ்க்கை | ... மறைந்து வாழ்வது (அஞ்ஞாதவாசம்) |
| 9 | 1 | 4 | வேலை | ... கடல் |
| 10 | 1 | 4 | மடை | ... உணவு |
| ,, | ,, | 7 | உணவின் பிண்டம் | ... உடல் |
| ,, | 2 | 5 | பரிசாரகர் | ... வேலைக்காரர் |
| ,, | 3 | 3 | மலைதல் | ... போர்செய்தல் |
| 11 | 2 | 3 | நொதுமல் | ... அயலார் |

| பக்கம். | பத்தி. | வரி. | சொல். | பொருள். |
|---|---|---|---|---|
| 12 | 2 | 7 | இடம் | ... இடப்பக்கம் |
| ,, | ,, | 10 | புரிசை | ... மதில் |
| ,, | ,, | 14 | கறுவி | ... அகங்கரித்து |
| 13 | 1 | 10 | அடையார் | ... பகைவர் |
| 14 | 3 | 12 | நிணம் | ... கொழுப்பு |
| 15 | 2 | 3 | ஊழிக்கடை | ... கற்பாந்த காலம் |
| ,, | ,, | 10 | கனன்று | ... கோபித்து |
| ,, | 3 | 12 | ஏதம் | ... துன்பம் |
| 16 | 1 | 2 | விழுப்புண் | ... போரில் மார்பிலும் முகத்திலும் படும் புண் |
| ,, | 3 | 1 | காயம் | ... புண், உடல் |
| 17 | 2 | 10 | வடக்கிருத்தல் | ... ஊண் உறக்கம் யாவும் விட்டுப் புண்ணிய திசையாய வடக்கு நோக்கியிருந்து உயிர் விடுதல். |
| 18 | 2 | 5 | மார்ச்சனை | ... முழவில் சாந்திட்டு ஓசை கூட்டுதல் |
| ,, | ,, | 12 | உவவுநாள் | ... பௌர்ணிமை |
| 21 | 1 | 4 | படிவம் | ... வழிபடுதெய்வம் |
| 23 | 2 | 2 | வஞ்சினம் | ... சூள் (சபதம்) |
| 23 | 2 | 6 | மகோன்னதம் | ... மிக உயர்வு |
| 24 | 1 | 15 | விரை | ... வாசனைப்பொருள் |
| ,, | ,, | 17 | மஞ்சனம் | ... நீராட்டம் (அபிடேகம்) |
| 26 | 2 | 9 | கரணம் | ... அறிவு |
| ,, | ,, | ,, | காசறு | ... குற்றமற்ற |
| ,, | ,, | 15 | குறுந்தடி | ... முரசடிக்கும் கோல் |
| 27 | 1 | 6 | கணையம் | ... கணையமரமென்னும் ஆயுதம் |
| 28 | 1 | 1 | வஞ்சி | ... வள்ளம் (ஓடம்) |

| பக்கம். | பத்தி. | வரி. | சொல். | பொருள். |
|---|---|---|---|---|
| 28 | 3 | 1 | நட்டவர் ... | சிநேகித்தவர் |
| ,, | ,, | 8 | தாரும் பொறியும் ... | வேப்ப மாலையும், கயல் பொறியும் |
| 30 | 1 | 8 | சித்திரம் ... | அழகு |
| ,, | ,, | 10 | ஆடகப்பொன் ... | நால்வகைப் பொன்னுள் ஒன்று |
| ,, | ,, | 12 | மத்தகமணி ... | தலையாய இரத்தினம் |
| 31 | ,, | 9 | அணங்கு ... | தெய்வ மகள் |
| ,, | ,, | 12 | கடுவினையாட்டி – | கொடிய விதியினையுடையாள் |
| 32 | ,, | 12 | எக்கர் ... | மணல்மேடு |
| 33 | ,, | 18 | கூடலர்கோன் ... | பாண்டியன் |
| 34 | ,, | 8 | செயிர் ... | கோபம் |
| ,, | ,, | 12 | பரவல் ... | வணங்குதல் |
| 34 | 2 | 3 | பொன்னி ... | காவிரி |
| 35 | 2 | 9 | சிலை ... | கல் |
| ,, | ,, | 14 | சிமயம் ... | உச்சி |
| 36 | 1 | 12 | நெடுமொழி ... | வஞ்சினம் (சூள்) |
| ,, | ,, | 19 | ஐம்பெருங்குழு – | அமைச்சர், புரோகிதர், சேனாதிபதியர், ஒற்றர், தூதுவர். |
| ,, | ,, | ,, | எண்பேராயம் ... | கரணத்தியலவர், கருமவிதிகள், கனகச்சுற்றம், கடைகாப்பாளர், நகரமாந்தர், படைத்தலைவர், யானைவீரர், குதிரைவீரர். |
| 37 | 1 | 2 | சேடம் ... | பிரசாதம் |
| ,, | ,, | 5 | வஞ்சியர் ... | பெண்கள் |
| ,, | ,, | ,, | இயம் ... | வாத்தியம் |

| பக்கம். | பத்தி. | வரி. | சொல். | பொருள். |
|---|---|---|---|---|
| 66 | 1 | 16 | நாஞ்சிற்படை | கலப்பை |
| ,, | ,, | 19 | வயா | கருவுற்ற மகளிர் கொள்ளும் மயற்கை |
| 67 | 1 | 2 | பொறி | இயந்திரம் |
| 68 | ,, | ,, | மறக்களவேள்வி | பேய்கள் வயிறார உண்ணும்படிப் போர்புரிந்து வேள்வி செய்தல் |
| ,, | 3 | 3 | தினவு | ஊறல் (சொறி) |
| ,, | ,, | 22 | வள்ளைப்பாட்டு | உலக்கைப் பாட்டு |
| 70 | ,, | 8 | செழியன் | பாண்டியன் |
| ,, | ,, | 18 | வழுதி | பாண்டியன் |
| 71 | 3 | 6 | உற்பாதம் | துர்க்குறி |
| 72 | 1 | 14 | துஞ்சினான் | இறந்தான் |
| ,, | ,, | ,, | விஞ்சிய | மிகுந்த |
| ,, | ,, | 24 | கலிமாக்கள் | குதிரைகள் |
| ,, | ,, | 25 | அவை | சபை |
| 74 | 2 | 9 | புழைக்கை | தும்பிக்கை |
| 75 | ,, | 5 | கருவுயிர்த்தல் | பிள்ளைப்பெறுதல் |
| ,, | ,, | 6 | காலக்கணிதர் | சோதிடர் |
| 76 | ,, | 7 | வெஞ்சமரம் | கொடியபோர் |
| 77 | ,, | 4 | நீர்வேட்கை | தாகம் |
| ,, | ,, | 12 | காவலன் | அரசன் |
| ,, | ,, | ,, | காவலோன் | வாயில் காப்போன் |
| 78 | 1 | 24 | வாளா | வீணே |
| 79 | ,, | 5 | சாக்குழவி | இறந்து பிறக்கும் குழவி |
| ,, | ,, | ,, | தொடர் | சங்கிலி |
| ,, | ,, | ,, | தொடர் | தொடர்பு (நட்பு) |
| 80 | 1 | 3 | ஈனம் | கேவலம் |

| பக்கம். | பத்தி. | வரி. | சொல். | பொருள். |
|---|---|---|---|---|
| 81 | 2 | 1 | பெருமிதம் | ... தருக்கு |
| ,, | ,, | 4 | தளை | ... விலங்கு |
| 82 | ,, | 14 | திருவலகிடுதல் | – பெருக்குதல் |
| 83 | 1 | 7 | நச்சரவம் | ... நஞ்சையுடைய பாம்பு |
| ,, | ,, | 10 | உலையா | ... கெடாத |
| ,, | ,, | 21 | பையரவு | ... படத்தையுடைய பாம்பு |
| 85 | 1 | 1 | உட்பகை | ... காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாற்சரியம் என்னும் அறுவகைப் பகை. |
| ,, | ,, | 3 | திறை | ... கப்பம் |
| 86 | 1 | 9 | பாசுரம் | ... திருப்பாடல் |
| ,, | ,, | ,, | திருமுகம் | ... உயர்ந்தோர் கொடுக்கும் நிருபம் |
| ,, | 2 | 12 | அத்தன் | ... சிவபிரான் |
| ,, | ,, | 15 | நிமலன் | ... இறைவன் |
| ,, | ,, | ,, | முடங்கல் | ... ஓலை |
| 87 | 1 | 7 | நால்வாய் | ... யானை |
| ,, | ,, | 14 | நிருத்தன் | ... நடராஜர் |
| 87 | 2 | 1 | கழறின | ... கூறியவை |
| 88 | 1 | 14 | பொன்னார்சடை | - பொன்னிறமானசடை |
| ,, | ,, | 15 | புலியூர் | ... சிதம்பரம் |
| ,, | 2 | 1 | இறைஞ்சி | ... வணங்கி |
| ,, | ,, | 3 | பரிசனர் | ... ஏவல்செய்வோர் |
| 89 | ,, | 2 | குஞ்சிதபாதம் | ... வளைந்ததிருவடி |
| ,, | 3 | 3 | துரப்ப | ... செலுத்த |
| 92 | 1 | 4 | பண்டாரம் | ... பொக்கிஷம் |
| ,, | 2 | 14 | பஞ்சாக்கரம் | ... ஐந்தெழுத்து (நமசிவய) |
| 93 | 1 | 13 | சேவகம் | ... ஊழியம் |

| பக்கம். | பத்தி. | வரி. | சொல். | பொருள். |
|---|---|---|---|---|
| 95 | 2 | 6 | பங்கப்பழனம் | ... சேற்றையுடைய வயல் |
| ,, | ,, | 12 | செப்பம் | ... நடுநிலை |
| ,, | ,, | 14 | இறையளவும் | ... சிறிதும் |
| 96 | 2 | 13 | முனைந்து | ... ஊக்கங்கொண்டு |
| ,, | ,, | 15 | பரிவு | ... ஆர்வம் |
| ,, | ,, | 17 | புணை | ... தெப்பம் |
| 97 | 1 | 1 | வாயில்கள் | ... காரணமாகிறவர்கள் |
| ,, | ,, | 2 | சண்ணித்த | ... பூசிய |
| ,, | 3 | 1 | ஆலமர் கடவுள் | - சிவபிரான் |
| ,, | ,, | 2 | அங்கணன் | ... சிவபிரான் |
| 98 | 2 | 4 | கழனி | ... வயல் |
| ,, | 3 | ,, | நவின்று | ... சொல்லி |
| 101 | 1 | 7 | புறகு | ... புறம்பானவர் |
| 102 | ,, | ,, | அனந்தப்பாயல் | - ஆதிசேடனாகிய படுக்கை |
| ,, | ,, | 14 | தலைக்கலன் | ... தலையிலணியும் ஆபரணம் |
| 103 | 2 | 3 | வெஞ்சமம் | ... கொடும்போர் |
| ,, | 3 | 2 | நலிவு | ... துன்பம் |
| ,, | ,, | 8 | வசி | ... மழை |
| ,, | ,, | 12 | பிதாமகன் | ... தந்தையைப்பெற்ற பாட்டன் |
| 104 | 2 | 5 | நற்கலை | ... நல்ல சாத்திரங்கள் |
| ,, | ,, | 10 | பெருமால் | ... பெருமயக்கம் |
| 105 | ,, | 2 | பௌராணிகர் | – புராணப் பிரசங்கத்தில் வல்லவர் |
| ,, | ,, | 11 | பன்னசாலை | ... ஆச்சிரமம் |
| ,, | ,, | 15 | வெவ்வுரை | ... கொடுஞ்சொல் |
| 106 | ,, | 2 | அயிர்த்தனர் | ... சந்தேகித்தனர் |
| 108 | 1 | 20 | உலோபி | ... பிறர்க்கு ஒன்றும் ஈயாதவன் |

| பக்கம். | பத்தி. | வரி. | சொல். | பொருள். |
|---|---|---|---|---|
| 110 | 2 | 1 | வைணவகுழாம்- வைஷ்ணவர்களின் கூட்டம் | |
| ,, | ,, | 2 | கொலுமண்டபம் | ... அரசன் கொலுவீற்றிருக்கும் மண்டபம் |
| ,, | ,, | 3 | பட்டிமண்டபம்—வித்தியா மண்டபம் | |
| ,, | ,, | 6 | அழுக்காறு | ... பொறாமை |
| 111 | ,, | 4 | மகரதோரணம்— மகரவடிவமைந்த ஓர் அலங்காரத் தொங்கல் | |
| ,, | ,, | 8 | பொற்சுண்ணம்- பொற்றூள் | |
| ,, | ,, | 10 | தாமம் | ... மாலை |
| ,, | ,, | ,, | பாவைவிளக்கு— பிரதிஷ்ம விளக்கு | |
| 112 | 2 | 8 | பிரமாணம் | ... பிரதிக்கினை (ஆணை) |
| ,, | 3 | 4 | திரிகரணம் | ... மனம், மொழி, மெய் |
| 113 | 2 | 7 | கழிவிரக்கம் | ... கழிந்ததற்கு இரங்குதல் |
| 114 | 1 | 2 | அருக | ... குறைய |
| ,, | ,, | 9 | சேவடிப்போது — சிவந்த பாதங்களாகிய தாமரை | |
| 115 | ,, | 5 | பனுவல் | ... நூல் |
| ,, | ,, | 18 | சிலாசாசனம் | ... கல்வெட்டு |

---

## பிழை திருத்தம்.

---

| | | | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|
| 14 | 3 | 12 | நிணக்கு | ... நிணக் கு |
| 27 | 1 | 6 | கணயம் | ... கணையும் |
| 68 | ,, | 8 | என் | ... 'என் |
| 80 | 2 | 3 | ஏன்னும் | ... என்னும் |

---

Printed at the South India Printing House, Nagercoil.